இப்பொழுது சென்னையில்

கிரௌன், ஸ்டார் - இரு தியேட்டர்களிலும்

மற்றும் பல முக்கிய நகரங்களிலும் நடைபெறுகிறது

# ஜெமினியின்

# ஞான சௌந்தரி



பி. கண்ணாம்பா
எம். கே. ராதா
வி. எஸ். சுசீலா
டீ. ஆர். ராமச்சந்திரன்
எல். நாராயண ராவ் நடித்தது

டைரக்ஷன்
முருகதாஸா



நம்பிக்கைக்கு
குட் இயர்

# ஞாபகமிருக்கட்டும்

உலகிலேயே ஆகிருதி வாய்ந்த ஜெயண்ட் டயர்கள்
அகவிலையைவிடக் குறைந்தே இருக்கும்

# அதனுல்தான்

உலகத்தின் எல்லா பாகங்களிலும் அதிகமான எடையைச் சுமந்து செல்ல இதர டயரைவிட குட் இயர் ஜெயண்ட் டயர்கள் உபயோகிக்கப்படுகின்றன




FIRST IN PERFORMANCE AND PREFERENCE THE WORLD OVER



# செம்பொன் நிறம்கொண்ட காரட் ஹல்வா டால்டாவில் தயாரித்தால் உயர்தரமாயிருக்கும்!

½ பவுண்டு காரட்டை சீவி நேர்த்தியாக துருவவும். 2 கப் பால் கொதிக்கவைத்து அதில் காரட்டைப்போடவும். சிறு சூட்டில் பால் பூராவும் கிட்டத்தட்ட வற்றும் வரை கிண்டிக்கொண்டிருக்கவும். 1½ கப் சர்க்கரை, துண்டாக்கிய பதாம் பிஸ்தா பருப்புகள், கிஸ்மிஸ் இவைகளைப்போடவும். கலவை சுமாராக கெட்டியானதும் ½ கப் டால்டாவை சூடாக்கி சிறுகச்சிறுக விட்டு ஹல்வா செம்பொன் நிறமாவது வரை வறுக்கவும். ஒரு சிட்டிகை பொடித்த ஏலக்காய், ஜலத்தில் கரைத்த ¼ தேக்கரண்டி குங்குமப்பூ இவைகளை சேர்த்துக்கொள்ளவும். டால்டா தனியாக விலகும்வரை ஹல்வா அடுப்பிலிருக்கவேண்டும். சூடாகவோ, ஆறினபிறகோ பரிமாறலாம்.




"ஆரோக்கியத்தைக் காப்பாற்றும்" உணவுகள் எவை?

நோய்களை எதிர்க்கும் உணவுகளே அவை. இது சம்பந்தமாக ரசமான விவரங்களுக்கு எங்களுக்கு எழுதுங்கள்.

இலவசமான ஆலோசனைகளுக்கு இன்றே — அல்லது என்று வேண்டுமானாலும் — எழுதுங்கள்!

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1



# பார்லிக் கஞ்சி தயாரிக்க சுலபமான முறை

இரண்டு கரண்டி பார்லியை சிறிது ஜலத்தில் பசைபோல் கரைத்து. பின் இரண்டு டம்ளர் ஜலத்தில் போட்டு அந்த திரவம் நன்றாகக் கொதிக்கவைக்கவும். பின்னர் இறக்கி ருசிக்கு வேண்டிய உப்பு அல்லது சர்க்கரை சேர்த்துப் பருகவும். இவ்வளவு சுலபத்தில். அந்தே நிமிஷத்தில், ஓர் ருசியான சிறந்த பானத்தைத்தயாரிக்கலாம். வியாதியுற்றே குணப்படும் தருவாயிலோருக்கும் பலஹீனருக்கு இது சிறந்த உணவு. பியூரிடி பார்லி புஷ்டியான தானியம் கலின்றும் தயாரித்து காற்று புகாமல் தகரடப்பாக்களில் அடைக்கப்பட்டிருக்கிறது. ஒரு பங்கு பியூரிடி பார்லி எட்டு பங்கு அரிசி பார்லிக்கு சமாகும். இதனால் எவ்வளவு நேரம், சிரமம் மிச்சமாகிறது என்று நினைத்துப்பாருங்கள்.




## பியூரிடி
## இந்தியன் பார்லி

---

# வேண்டிய அளவு வாங்கலாம்...




## தௌராலா க்யூப் சர்க்கரை ஏராள மாகக்கிடைக்கிறது!



இன்றே உங்கள் வியாபாரியிடம் அல்லது டில்லி க்லாத் & ஜெனரல் மில்ஸ் கம்பெனி சர்க்கரை வியாபாரியிடம் விசாரியுங்கள்.



# கல்கி





## ராஜாஜி மலர் பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| மலர் 7<br>இதழ் 47 | ஜூன் 20 | சர்வதாரி ௵<br>ஆனி 7 |




'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.



சென்னை லாம்ஸன் கம்பெனி அக்கௌண்டண்ட் ஸ்ரீ N. ரங்கசாமி அய்யங்கார் குமாரி சௌபாக்யவதி, செல்லம்மாளுக்கும் ஹைகோர்ட் அம்பில் ஸ்ரீ O. A. கிருஷ்ணசாமி அய்யங்கார் குமாரன் சிரஞ்சீவி O. A கோவிந்தராஜனுக்கும் சென்னையில் 2-6-1948 புதன்கிழமையன்று விவாஹம் சிறப்பாக நடந்தேறியது. திருமண வைபவத்தின் போது மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் வந்து குவிந்தன.




மலர் 7 { தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். { இதழ் 44

## தொண்டின் சிகரம்

ஏழு வருஷத்துக்கு முன்னால் 1941-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் "கல்கி" பத்திரிகையைத் தொடங்கினோம். முதல் இதழின் முதல் பிரதியை ஸ்ரீ விநாயகப் பெருமான் வாங்கிக் கொண்டு முதல் சந்தாதாரராகவும் சேர்ந்து அருளினார். அதுமுதற் கொண்டு பல விக்கினங்களைக் கடந்து "கல்கி" யின் ஜீவ யாத்திரை தொடர்ந்து நடந்து வருகிறது. இந்த யாத்திரையில் பல விசேஷ மலர்கள் வெளியிட்டிருக்கிறோம். இதுவரையில் நாம் வெளியிட்டிருக்கும் எந்தக் "கல்கி" இதழும் அல்லது விசேஷ மலரும் இந்த ராஜாஜி 'மலர் வெளியிடுவதின் மூலம் நாம் அடைந்திருக்கும் மகிழ்ச்சியையும் பெருமையையும் அளித்ததில்லை. நமது மகிழ்ச்சியையும் பெருமையையும் "கல்கி" நேயர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறோம். பகிர்ந்துகொண்டு அநுபவிக்க நேயர்களுக்குப் பூரண உரிமையுண்டு. ராஜாஜியைத் தேசமே நிராகரிக்கிறது என்று தோன்றிய காலத்தில் குருட்டுப் பக்தியுடன் "கல்கி" அவரை ஆதரித்து நின்றது. இதன் காரணமாக நாலாபுறமும் பல இன்னல்கள் நம்மைச் சூழ்ந்தன. அவற்றையெல்லாம் சமாளிப்பதற்கு நமக்குத் தைரியமும் பலமும் அளித்தது பல்லாயிரக் கணக்கான "கல்கி" நேயர்களின் உறுதியான ஆதரவேயாகும். அந்த ஆதரவு நாளுக்கு நாள் வளர்ந்து பல்கிப் பரவிக் "கல்கி" யின் ஏழு வருஷத் தொண்டின் சிகரமாக இந்த ராஜாஜி மலர் வெளி வருகிறது. மலைச் சிகரம் அளவில் சிறிதாகத்தான் இருக்கும்; ஆனால் சிகரத்தின் மகிமை அதனுடைய உன்னதத்திலேயே அல்லவா?

## கனவோ? மாயையோ?

மூன்று வருஷத்துக்கு முன்னால் தமிழ் நாட்டில் துரதிர்ஷ்ட வசமாகத் தோன்றிய வாதப் பிரதிவாதங்கள் கனவோ, மாயையோ என்று எண்ணும்படியாக மறைந்து விட்டன. அவற்றை இச்சமயம் ஞாபகப்படுத்துவதுகூட உசிதமன்று. ஒரு முக்கிய காரணத்தை முன்னிட்டு ஞாபகப் படுத்தவேண்டியிருக்கிறது. ராஜாஜி சம்பந்தமான வாதப் பிரதிவாதங்கள் "கல்கி"யின் மூலம் அதிகமாக வளர்ந்தன என்று இரு சார்பிலும் சில நண்பர்கள் கருதினார்கள். இந்தக் காலத்துச் சிறந்த தமிழ் மகனுடைய தொண்டைத் தமிழகம் இழந்துவிடக் கூடாதே என்னும் கவலையையும் ஆர்வத்தையும் தவிர, வாதப் பிரதிவாதங்களில் ஈடுபட்டதில் நமக்கு வேறு எவ்வித நோக்கமும் கிடையாது.

அதிக ஆர்வம் காரணமாக யாருடைய மனமாவது புண்படும்படி ஏதேனும் "கல்கி"யில் எழுதப் பட்டிருந்தால் அதற்காக நம் வருத்தத்தை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்கிறோம். தமிழ்த்தாயின் புதல்வர் ஒருவர் சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் பதவி ஏற்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழ் மக்கள் எல்லோரும் ஏகோபித்து மகிழ்ச்சியடைய வேண்டியது நியாயம். அந்த மகிழ்ச்சிக்குத் தடையாக எதுவுமே நிற்கக் கூடாது அல்லவா?

## ஒன்றுக்கு நூறு

தமிழ் நாட்டில் உள்ள அறிவாளிகளைப் போல் உலகில் வேறு எந்தப் பகுதியிலும் பார்ப்பது அரிது.

**"காவிரி தென் பெண்ணை பாலாறு—தமிழ்**
**கண்டதோர் வையை பொருநை நதி"**

என்னும் ஐந்து ஆறுகள் பாயும் தமிழ் நாட்டில் மக்களின் அறிவாற்றல் மிகச் சிறந்து விளங்குகிறது. படித்தவர்கள் மட்டுந்தான் என்பதில்லை; சாதாரண கிராமங்களில் 'வீட்டுத் திண்ணைகளில் உட்கார்ந்து அரசியல்—பொருளாதாரப் பிரச்னைகளைப் பற்றிப் பேசுவோரின் அறிவாற்றல் யாரையும் பிரமிக்கச் செய்துவிடும். எவ்வளவு சிக்கலான விஷயத்தையும் புரியாத தமிழ்நடையில் படித்துத் தெரிந்து கொள்வார்கள்! விவாதத்தில் இறங்கி விட்டாலோ சொல்ல வேண்

டியதில்லை. பெரிய பெரிய அரசியல் தலைவர்கள், பொருளாதார நிபுணர்கள் கூறும் வாதங்களுக்கெல்லாம் பிரதி வாதம் கூறித் தவிடுபொடியாக்கி விடுவார்கள்.

தமிழகத்திலுள்ள இத்தகைய அபார அறிவின் ஆற்றலானது பெரும்பாலும் அழிக்கும் ஆற்றலாகவே இருந்து வருகிறது. யார் எதைச் சொன்னாலும் அதை எதிர்த்து ஆயிரம் வாதங்களைச் சொல்லி நிர்மூலமாக்கப் பயன்பட்டு வருகிறது. இத்தகைய சிறந்த அறிவின் அழிக்கும் ஆற்றல் ஆக்க சக்தியாக மாற வேண்டும். மாறினால் தமிழ் மக்களாகிய நம்மால் சாதிக்கக் கூடாதது ஒன்றுமேயிராது. உலகமே நம் வசத்தில் வந்து விடும் என்று சொன்னால் மிகையாகாது.

இதை இன்னும் சிறிது விளக்கிச் சொல்வதென்றால் :—நம்மில் ஒரு பெரியவர் இருக்கிறார். அவர் ஒப்பற்ற அறிவாளி என்றும் தியாகி என்றும் திறமைசாலி என்றும் தெளிவாகத் தெரிந்து கொள்கிறோம். அவரே நம் தலைவராவதற்குத் தகுதியானவர் என்றும் அறிந்து கொள்கிறோம். பிறகு, என்ன செய்ய வேண்டும்? அத்தகைய ஒருவர் ஏதேனும் ஒரு காரியத்தைச் சொன்னால், அதற்குச் சாதகமாக அவர் ஒரு காரணத்தைச் சொன்னால், மற்றும் தொண்ணூற்றொன்பது காரணங்களை நாம் கண்டுபிடித்துச் சொல்லத் தயாராக வேண்டும். நம்முடைய அறிவை அந்த வழியில் பயன்படுத்த வேண்டும். இப்போது என்ன செய்கிறோம்? அந்த உத்தமத் தலைவர் ஒரு விஷயத்தைச் சொன்னால் அதற்கு எதிராக நூறு வாதங்களைக் கண்டு பிடித்துச் சொல்வதில் நம்முடைய அறிவாற்றலைச் செலவழிக்கிறோம்.

அவ்வளவு பெரிய அறிவாளியை—தியாகியை — வாதத்தில் தோற்கடிப்பதில் திருப்தி அடைகிறோம். அவ்வளவு தலை சிறந்த தலைவரிடம் குற்றம் கண்டு பிடித்துச் சொல்வதில் சந்தோஷப் படுகிறோம்!—இந்த மனப்பான்மை மாற வேண்டும். நம்முடைய அறிவும் ஆற்றலும் வாதத்திறமையும் நம் தலைவரையோ தலைவர்களையோ தாங்கி நிற்பதில் பயன் படவேண்டும். அவர்கள் சொல்லும் காரியத்துக்குச் சாதகமாக ஒரு வாதத்தை அவர்கள் சொன்னால் நாம் அதே முறையில் இன்னும் 99 சாதகமான வாதங்களைக் கண்டுபிடிக்க வேண்டும். தமிழ் மக்கள்,—அறிவிற் சிறந்த தமிழ் மக்கள்,—எப்போது இத்தகைய மனப்பான்மையை அடைகிறார்களோ, அப்போது நமக்கு நிகர் இந்த உலகிலேயே இல்லை என்ற உன்னத நிலையை அடைவோம்.

## தேவர் பிரிந்தார்

தமிழகமும் தமிழகத்திலே நாமும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருக்கவேண்டிய இந்தச் சமயத்தில் மிகத் துயரம் தரும் சம்பவம் ஒன்று நிகழ்ந்திருக்கிறது. திருச்சிராப்பள்ளியின் தீர புருஷரும் தேச பக்த வீரரும் ராஜாஜியின் அத்தியந்த பக்தர்களில் ஒருவருமான ஸ்ரீ பி. ரத்தினவேலுத் தேவர் அவர்கள் இந்த மண்ணுலகை நீத்து வானவர் நாட்டை அடைந்தார். பாவம்! நெடுங்காலமாக ஸ்ரீ தேவர் கொடிய நோயின்பாற்பட்டு வேதனைக்குள்ளாகி யிருந்தார். எனினும், பொதுக் காரியங்களில் அவருடைய ஊக்கம் அணுவளவும் குன்றியதில்லை. அரசியல் வாழ்க்கையில் அவர் சஞ்சல சுபாவம் இன்றி இரும்பையொத்த மன உறுதி கொண்டவர். திருச்சிராப்பள்ளியில் ஒரு சமயம் ஹிந்துக்களின் நிலைமை சிறிது கவலைக் கிடமா யிருந்தபோது ஸ்ரீ தேவர் முன்னணியில் நின்று பழந் தமிழ்க்குடிகளின் வீரம் இத்தகையது என்பதை நிலைநாட்டினார். அஞ்சாமை என்பது அவருடைய பிறவிக் குணம்.

யமனைக் கண்டபோதுகூட அவர் அணுவளவும் அஞ்சாமல் "யாரடா நீ, என்னை அழைக்க! நானே வருகிறேன், போடா!" என்று சொல்லியிருக்கக்கூடும். ஸ்ரீ தேவர் அவர்களின் குடும்பத்தாருக்கும் அவருடைய பரந்து விரிந்த நண்பர் பெருங் குழுவுக்கும் நம்முடைய மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# அரியாசனத்தில் ஜனகமகாராஜர்



புது டில்லி கவர்னர்ஜெனரல் மாளிகை
தர்பார் மண்டப சிம்மாசனம்.

சங்க நிதி பதும நிதிகளுக்கு உரியவளும், காமதேனுவையும் கற்பக விருட்சத்தையும் அளித்தவளும், சகல புவனங்களிலும் உள்ள சகல விதமான ஐசுவரியங்களின் தனி நாயகியுமான செல்வத் திருமகள் — மகாலட்சுமி—ஸ்ரீ தேவி—ஒரு சமயம் பூவுலகில் மானிட வடிவந் தரிக்க உளங் கொண்டாள். மனித குலத்தில் எந்த பாக்கியவானுடைய புதல்வியாகப் பிறக்கலாம் என்று சிந்தனை செய்தாள். உலகத்து மாந்தர் கேவலம் கொஞ்சம் பணம் சேர்ந்தவுடனேயே கர்வங் கொண்டு விநயத்தை இழந்து அழிவைத் தேடிக் கொள்கிறார்களே, அப்படியிருக்கச் சகல செல்வங்களுக்கும் உரியவளான தன்னைப் புதல்வியாக அடைந்து கர்வங் கொள்ளாமலிருக்கக் கூடிய மனிதன் யார் என்று ஆராய்ந்தாள். முனிவர்கள் — ரிஷிகள் — தபஸ்விகள் கோஷ்டியில் அத்தகைய மனிதரைத் தேடினாள். பெருஞ் செல்வம் படைத்த பிரபுக்களிடையில் தேடினாள். எங்கும் அத்தகைய மனிதர் ஒருவரைக் காண முடியவில்லை.

கடைசியில், இராஜ குலத்தில் பிறந்தவர்களிடையிலே ஒருவேளை அத்தகைய மனிதர் இருக்கலாமோ என்று தேடிப் பார்த்தாள். தேடிய மனிதரைக் கண்டு பிடித்தாள். மிதிலாபுரியின் மன்னராகிய ஜனக மகாராஜரைக் கண்டதும், "இவர்தான் நம்மை மகளாகப் பெறுவதற்குரியவர்" என்று அறிந்தாள். "இராஜ போகத்தினாலும் இராஜ்யாதிகாரத்தினாலும் மனங் கலங்காத மனிதர் இவர். எத்தகைய செல்வங்களும் சம்பத்துக்களும் இவருடைய வைராக்கியத்தைக் குலைக்க முடியாது. மகாலக்ஷ்மியை மகளாகப் பெற்றாலும் இவருடைய உள்ளத் தூய்மைக்குப் பங்கம் நேராது!" என்று முடிவு செய்து ஸ்ரீதேவியானவள் மிதிலாபுரியில் ஜனக மகாராஜருடைய திருப்புதல்வியாக அவதரித்தாள். சீதை என்றும், மைதிலி என்றும், ஜானகி என்றும் பெயர் பெற்றாள்.

அந்த நாள் முதல் இன்று வரையில் பெருஞ் செல்வத்தினிடையே திட வைராக்கியத்துடன் வாழக்கூடிய மகான்களுக்கு ஜனக மகாராஜரை உதாரணமாகச் சொல்வது பாரத நாட்டில் வழக்கமாயிருந்து வருகிறது.

புண்ணிய பாரத பூமியில் இன்றைய தினம் நம்மிடையே ஒரு ஜனக மகாராஜர் இருக்கிறார். பாரத நாட்டின் தென் பகுதியில் தெய்வத் தமிழகத்தில் பிறந்த புண்ணியர் அவர். அரண்மனை வாழ்வையும் ஆசிரமக் குடிசையையும் ஒன்றாகக் கருதுகிறவர். சுகத்தையும் துக்கத்தையும் சமமாக எண்ணுகிறவர். போற்றுதலினால் பூரிப்பதில்லை; வசை மொழிகளினால் ஆயாசமடைவதுமில்லை. பதவியையும் அதிகாரத்தையும் அவர் தேடிச் செல்வதில்லை; அவை தேடி வரும்போது பயந்து ஒதுங்குவதுமில்லை. தாமரை இலைமீதுள்ள பனித்துளியைப் போல் எந்தவிதப் பதவியையும் வகிக்கக் கூடியவர். வகித்து நடத்திய பதவி தம்மை விட்டுப் போனால் சிறிதும் சஞ்சலம் அடையாதவர்.

நண்பருக்கு நண்பர் அவர்; எதிரிகளுக்கும் அவர் நண்பர்! நம் காலத்தில் 'அஜாதசத்ரு' என்று சொல்லக்கூடிய சாத்விக புருஷர். அவரைச் சிலர் தங்களுக்கு எதிரியென்றும் விரோதி என்றும் எண்ணுதல் கூடும். ஆனால் அவர் இந்தப் பூவுலகில் பிறந்த யாரையும் தன் எதிரியாகவோ விரோதியாகவோ எண்ணுவது கிடையாது.

"நிலையிற்றிரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது"

என்று தமிழ் மறை தந்த பொய்யாமொழிப் புலவர் வாக்கை இன்று நம் கண் எதிரே மெய்யாக்கி வருகிறவர். அவர் யார் என்று சொல்லவும் வேண்டுமா? நம் அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள்தான்.

• • •

இந்தியா தேசமே பார்த்து வியக்கும் வண்ணம் ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக இரண்டு வருஷம் பதவி வகித்தார். பதவியைத் துறக்க வேண்டிய காலம் வந்தது. "பதவியைத்தான் விடப் போகிறோமே? எது எப்படிப் போனால் என்ன?" என்று கைக்கு வந்திருந்த ஆபீஸ் 'பைல்'களையெல்லாம் அப்படியே கட்டோடு திருப்பி அனுப்பி விட்டாரா? கிடையாது. இரவும் பகலும் தினம் இருபது மணி நேரம் வீதம் நாலு நாள் இடைவிடாத வேலை செய்தார்; கையில் இருந்த 'பைல்'களையெல்லாம் பைசல் செய்தார். பைசல் செய்த பைல்களைச் சர்க்கார் வாங்கிக் கொடுத்திருந்த காரில் ஏற்றி வில்லைச் சேவகனையும் ராஜிநாமாவையும் கூட அனுப்பினார்.

அனுப்பிய அடுத்த நிமிஷம் என்ன செய்தார் என்று நினைக்கிறீர்கள்?

தமிழ் அகராதியை எடுத்து வைத்துக்கொண்டு, ஆங்கிலத்திலுள்ள விஞ்ஞானச் சொற்களுக்குப் பொருத்தமான தமிழ்ச் சொல் கண்டு பிடிக்கும் வேலையில் ஈடுபட்டார்!

பதவியை ராஜிநாமா செய்ததற்கும் சிறை புகுந்ததற்கும் இடையில் மூன்று தினங்கள் இருந்தன. இந்த மூன்று தினங்களிலும் எத்தனை எத்தனையோ பேர் அவரைப் பார்க்க வந்தார்கள். என்னென்னவோ சொன்னார்கள். சிலர் உபசார மொழி புகன்றார்கள்; சிலர் ஆறுதல் கூறினார்கள்; சிலர் துக்கம் விசாரித்தார்கள்; சிலர் அவரைப் போற்றிப் பாராட்டினார்கள்.

அதையெல்லாம் ராஜாஜி ஒரு காதால் வாங்கி இன்னொரு காதால் விட்டுக் கொண்டிருந்தார். வந்தவர்கள் போனவுடனே மறுபடியும் தமிழ் அகராதியைப் புரட்டத் தொடங்கினார்! அவருடைய உள்ளம் நிம்மதியும் சாந்தமும் பெற்றுச் சம நிலையில் நின்றது.

ராஜாஜி பிரதம மந்திரி பதவி வகித்ததால் பிரதம மந்திரி பதவி உயர்வு பெற்றது. அம்மாதிரியே அவர் கவர்னர் உத்தியோகம் பார்த்த காரணத்தினால் கவர்னர் பதவியும் உயர்வு அடைந்தது!

சென்ற 1947ம் வருஷம் ஆக

ஸ்டு 15ம் தேதி இந்தியா பூரண சுதந்திர ஆட்சி அடைந்த போது, ராஜாஜி மேற்கு வங்காளத்தின் கவர்னர் பதவியை ஏற்கும்படி நேர்ந்தது.

அதற்கு ஒரு வருஷத்திற்கு முன்னால் 1916 ஆகஸ்டில் கல்கத்தா நகரிலேதான் சமூகத் துவேஷப் படுகொலைப் பேய் தன்னுடைய கோர பயங்கர தாண்டவத்தை முதன் முதலாக ஆரம்பித்தது.

எனவே 1917 ஆகஸ்டு 15உ கல்கத்தாவில் என்ன நேரிடுமோ என்று அனைவரும் கலக்கமுற்றார்கள்.

“ஐயையோ! கல்கத்தாவுக்கா போகிறீர்கள்? ரொம்பத் தொல்லையாயிற்றே!” என்றார்கள்.

“தொல்லை யென்றால் யாராவது ஒருவர் அதைத் தாங்கித்தானே ஆக வேண்டும்? என் முதுகிலேயே சுமந்து பார்க்கிறேன்!” என்றார் ராஜாஜி.

ஸ்ரீ சரத் போஸின் கோஷ்டியார் சிலர் “ராஜாஜி வேண்டாம்; திரும்பிச் செல்க!” என்றார்கள்.

“ஆகட்டும், ஆகட்டும்! வந்த வேலை முடிந்ததும் திரும்பிச் செல்லத்தான் போகிறேன்!” என்றார் ராஜாஜி.

ராஜாஜி கல்கத்தாவுக்குச் சென்ற வேளை நல்ல வேளை; பலர் எதிர்பார்த்தபடி அங்கு சமூக பயங்கரக் கலகங்கள் நடைபெறவில்லை. யாரும் எதிர்பாராத முறையில் ஹிந்து-முஸ்லிம் சகோதர பாவம் தோன்றி வளர்ந்து வந்தது.

ராஜாஜி கல்கத்தாவுக்கு வந்த மறுதினமே “ராஜாஜி வேண்டாம்” என்ற கோஷத்துக்குப் பதில் “ராஜாஜிக்கு ஜே!” என்ற கோஷம் கிளம்பிற்று. அந்த கோஷம் நாளுக்கு நாள் வளர்ந்து வலுப்பெற்று வந்தது.

ராஜாஜி மேற்கு வங்காள கவர்னராக இருந்த பத்து மாத காலத்தில் வங்காளிகளிடையே தேசபந்து தாஸையும் நேதாஜி போஸையும் போன்ற அன்பும் போற்றுதலும் பெற்றார்.

அரசியல் உலகத்தில் இத்தகைய ஓர் அற்புதம் நடந்ததை நம் கண் முன்னால் கண்டு மகிழ்ந்தோம்.

இந்த 1948 ஜூன் மாதம் 21உ யன்று ராஜாஜியினால் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி உயர்வு பெறப் போகிறது! இதற்கு மேல் உயர்வதற்கு இல்லை யென்று ராஜாஜியின் பதவிக் காலத்தோடு அது முடிந்து விடவும் போகிறது!

சென்ற வருஷம் ஆகஸ்டு 15உ வரையில் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி மிகப் பொல்லாத பதவியாயிருந்தது. உலகத்திலேயே சுகபோகத்துக்கும் சர்வாதிகாரத்துக்கும் இணையற்ற பதவியாயிருந்தது.

இந்திய தேசத்தின் முப்பத்தெட்டு கோடி மக்களுடைய வாழ்வை நிர்ணயிக்கும் யதேச்சாதிகாரம் கவர்னர் ஜெனரலுக்கு இருந்தது. வாரன் ஹேஸ்டிங்ஸ் காலம் முதல் ஜெனரல் வேவல் காலம் வரையில் பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரல்மார்கள் பிரிட்டிஷாரின் நன்மைக்காக இந்தியாவைச் சுரண்டுவதற்காகவே தங்கள் அதிகாரத்தைப் பிரயோகித்து வந்தார்கள். அந்த நோக்கத்துக்காக அவர்கள் கையாண்ட அடக்குமுறைகளின் பயங்கரக் கொடுமைகளை நாமே நேரில் பார்த்திருக்கிறோம்; அநுபவித்துமிருக்கிறோம்.

அத்தகைய கவர்னர்—ஜெனரல் பதவிக்கு ராஜாஜி வரப்போகிறார். உலகத்திலேயே மிகப் பெரிய அரண்மனைகளில் ஒன்றில் வசிக்கப் போகிறார்.

“நெருப்பு அணைக்கும்போது சில சமயம் புகை உண்டாகு மல்லவா? அணைந்துபோன பிரிட்டிஷ் ஆட்சி விட்டுச் செல்லும் புகைதான் இப்போதைய கவர்னர் ஜெனரல் பதவி!” என்று ராஜாஜியே சொல்லியிருக்கிறார். ஆயினும் புகை சில சமயம் ராட்சஸ வடிவம் அடைவதுண்டு. பதவி கர்வம், அதிகார ஆசை என்னும் இரண்டும் இராவண கும்பகர்ணர்களாக உருவெடுப்பதுண்டு. சுகபோக மோகம் என்னும் மோகினியாகவும் அது உருவெடுத்து விடும்.

இதை முன்னிட்டுத்தான் நம் அரும் பெரும் வடநாட்டுத் தலைவர்கள் தீர்க்காலோசனை செய்து, அரியாசனத்தில் ஜனக மகாராஜர் வீற்றிருந்ததுபோல் கவர்னர் ஜெனரல் பதவியை வகிக்கக் கூடிய வைராக்கிய சீலரை அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அவர்கள் செய்துள்ள முடிவை நாம் போற்றிப் பாராட்டுகிறோம்.

• • •

ஆதிகாலத்திலிருந்து இந்திய சாம்ராஜ்யங்கள் பல அஸ்தினாபுரத்தைத் தலைநகராகக் கொண்டு செழித்தோங்கியிருக்கின்றன. இந்திய நாட்டுக்குத் தன் பெயரை அளித்த வீராதி வீரன் பரத சக்கரவர்த்தி அஸ்தினாபுரத்தில் ஆட்சி புரிந்தான். பரதனுடைய வம்சத்தில் வந்த கடைசி சக்கரவர்த்தியான தர்மபுத்திரர் அஸ்தினாபுரத்துச் சிம்மாசனத்திலேதான் அரசு வீற்றிருந்தார்.





"பிற்பாடு, சரித்திர பூர்வமான காலத்தில் அன்றினபுரம் இருந்த இடத்தில் டில்லிமாநகர் எழுந்தது.' மொகலாய சக்கரவர்த்திகளில் தர்மநெறி நின்று ஆட்சி புரிந்தவரான அக்பர் சக்கரவர்த்தி டில்லிமா நகரின் சிம்மாசனத்திலேதான் வீற்றிருந்தார்.

பரத மகாராஜாவுக்கும் தர்மபுத்திர மகாராஜாவுக்கும் அக்பர் சக்கரவர்த்திக்கும் அடுத்தபடியாக அதே வரிசையில் சேர்க்கக் கூடியவரான ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் இப்போது டில்லி அரியாசனத்தில் ஏறி வீற்றிருக்கப் போகிறார்.

* * *

ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்ததும் நாட்டில் பஞ்சம் தீரும் என்றும், வறுமை ஒழியும் என்றும், வளம் செழிக்கும் என்றும், மாதம் மும்மாரி பெய்யுமென்றும், நாட்டில் பாலும் தேனும் கலந்து ஆறாக ஓடுமென்றும் நாம் சொல்ல முடியாது.

பசுவும் புலியும் ஒரு துறையில் தண்ணீர் குடிக்கும் என்றும், சமூகத் துவேஷம் அந்த க்ஷணமே ஒழிந்து நாட்டில் சகோதரபாவம் நிலவும் என்றும் நாம் சொல்வதற்கில்லை.

இம்மாதிரி சொல்லப்படும் ஜோசியங்களை யெல்லாம் நாம் நம்பவும் தயாராயில்லை.

ராஜாஜி கவர்னர் ஜெனரலாக வந்த பிறகும் இயற்கையின் கோபத்தினால் தேசத்திற்கு விளையக்கூடிய கேடுகளும் மனிதர்களின் மடமையினால் நாட்டுக்கு விளையக்கூடிய தீமைகளும் நேர்ந்து கொண்டுதானிருக்கும்.

கடவுளின் நியதி என்பதாக ஒன்று இருக்கிறதல்லவா? அதன்படி உலகத்தில் எது எது எப்படி நடக்க வேண்டுமோ, அப்படி நடந்துகொண்டு தானிருக்கும். இயற்கையின் விபரீத கோபங்களுக்கும் தெய்வத்தின் அறிய முடியாத சித்தத்துக்கும் முன்னால் யார்தான் என்ன செய்ய முடியும்?

ஆனால் ஒன்று நிச்சயமாய்ச் சொல்லத் தயாராயிருக்கிறோம்.

புது டில்லியின் அரியாசனத்தில் ராஜாஜி வீற்றிருக்கும்போது இந்தியா தேசத்தை அன்பும் அறிவும் ஆட்சி புரியும்; கருணையும் தயையும் பொறுமையும் நிடசித்தமும் அதிகாரம் செலுத்தும்; அணுவளவும் நெறிதவறாத நடுநிலைகண்ட நியாயம் சகலருக்கும் கிடைக்கும்.

* * *

தமிழ்த்தாயின் அருமைப் புதல்வர் சுதந்திர இந்தியாவின் தலைமை அதிகார பீடத்தில் — புது டில்லி அரியாசனத்தில் — வீற்றிருக்க நேர்ந்தது பற்றித் தமிழ் மக்கள் அனைவரும் அளவிலாக் குதூகலமும் பெருமையும் அடைய இடம் உண்டு. தமிழ்நாட்டு இளங் குழந்தைகள் தலை நிமிர்ந்து மார் தட்டிக் கொண்டு பேசுவதற்கு உரிமை உண்டு.

"தமிழன் என்று சொல்லடா!
தலைநிமிர்ந்து நில்லடா!"

என்ற கவி வாக்கைக் கடைப் பிடிக்க இதைக் காட்டிலும் நல்ல சந்தர்ப்பம் இனி எப்போது வரப்போகிறது?

# பித்தளை மாற்றுத் தங்கம்

[ரஸிகமணி]

பித்தளை மாற்றுத் தங்கத்தை வாங் கிக் கொடுப்போம். அதை அடைகல் மேல் வைத்துக்கொண்டு தட்டார்கள் என்ன பாடு படுத்துவார்கள் என்பது நமக்குத் தெரியும். சுத்தியலால் இப்படி அடிப்பார்கள், அப்படி அடிப்பார்கள். இடை இடையே உலையில் காய வைத்து மறுபடியும் மறுபடியும் தட்டுவார்கள். துவைச்சல் கொடுப்பதற்காக அவ்வளவும் செய்கிறார்கள். அவ்வளவும் செய்தால்த் தான் தங்கம் பணிக்குதவும்.

இயற்கைக்கு ஒரு நல்ல ஆன்மா கிடைத்து விட்டால்—சரி, நல்ல பணிக்கு உதவும் என்று எண்ண ஆரம்பித்து விடுகிறது அது. அந்த ஆன்மாவை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

ராஜாஜி கிடைத்தார்கள். அவர்களை இயற்கை என்ன எல்லாம் செய்தது என் பதைப் பார்க்கலாம்.

• • •

நல்ல பண்பாடுள்ள பக்தி சிரத்தை யுள்ள குடும்பத்தில் ராஜாஜி பிறந் தார்கள். இயற்கையானது தட்டார வேலை செய்ய ஆரம்பித்தது.

உடம்பைப் பலஹீனமாக ஆக்கியது. அதோடு கண்ணை அதிக பலஹீனமாக ஆக்கிவிட்டது.

பிள்ளையைப் பள்ளிக்கூடத்தில் போட் டார்கள். 'ஷார்ட் ஸைட்' (Short Sight) காரணமாக உபாத்தியாயர் பிளாக் போர்டில் எழுதும் எழுத்தோ கணக்கோ ஒன்றும் கண்ணுக்குப் புலப் படுவதில்லை. விஷயத்தையும் கணக்கை யும், தானே யோசனை செய்து தெரிந்து கொள்ள வேண்டியதாயிற்று. ஆனால் உண்மையை நேருக்கு நேர் பார்க்க முடிந்தது. அதனால் உண்மையை அனுபவிக்கவே முடிந்தது.

உண்மைக்கும் ராஜாஜிக்கும் இடையே உபாத்தியாயர்கள் நிற்கவில்லை; பள்ளிக் கூடமும் நிற்கவில்லை.

எப்போது உபாத்தியாயரும் பள்ளிக் கூடமும் வந்து இடையூறு செய்ய வில்லையோ, அப்போது அறிவுத் தத்துவம் உத்ஸாகமாக வேலை செய்யத்தானே வேண்டும்? புஸ்தகமும் வார்த்தையும் உபாத்தியாயரும் கண்ணுக்குத் தென் படாமல் ஒதுங்கிவிட்டபடியால் பாடங் களிலுள்ள விஷயங்கள் யாதொரு கஷ்ட மும் இல்லாமல் புலப்படல் ஆயின. மற்றப் பிள்ளைகளுக்கு — அதாவது, நல்ல பார்வையுள்ள பிள்ளைகளுக்கு —உண்மை புலப்படுவதில்லை. உலகமே வார்த்தைகள், பாட புஸ்தகங்கள், உபாத்தியாயர்கள் என்பதாகக் காட்சி அளிக்கிறது. பிறகு அறிவுத் தத்துவத் துக்கு அங்கே வேலை ஏது?

• • •

ராஜாஜி சேலத்தில் வக்கீல் வேலை பார்த்து வந்தார்கள். அபூர்வமான திற மையுடனும் தெளிவுடனும் வழக்குகளை எடுத்து விளக்குவதன் காரணமாகச் சேலம் ஜில்லா மாத்திரம் அல்லாமல் சுற்று வட்டத்திலுள்ள ஜில்லாக்களில் எல் லாமே பெரிய வழக்கு என்றால் ராஜாஜி தான் வக்கீல் என்று ஆகிவிட்டது. (அந்தக் காலத்தில் ராஜாஜி என்று பெயர் ஏற்படவில்லை; ஸி. ராஜகோபா லாச்சாரியார் என்று சொன்னார்கள்.)

அப்படியெல்லாம் மகோன்னத தசை யில் இருந்தபோது உடம்பில் நூதன மான ஒரு பலஹீனம் உண்டாயிற்று. ஆனால் அது ஒரு காரியம் அல்ல. உள்ளத் தில் உண்டான துன்பந்தான் பெரியது. ஏழை மக்கள் படும் கஷ்டத்தைப் பார்த் துச் சகிக்க முடியவில்லை. போதாக் குறைக்குக் காந்திஜியின் கருணை வெள்ள

மும் அந்த உள்ளத்தில் வந்து பாய்ந்தது. அவ்வளவுதான்; வக்கீல் வேலையை விட்டொழிக்கலாயிற்று.

• • •

பிரிட்டிஷ் சர்க்கார் தேசத்துக்குச் செய்துள்ள கொடுமைகள் மனசைப் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தன. ஜெயிலுக்குப் போக வேண்டியதாயிற்று.

உடம்பு என்ன தொந்தரவு செய்து கொண்டிருந்தால் என்ன, குடும்பக் கவலைகள் மனசை வாட்டிக் கொண்டிருந்தால் என்ன! போய்த் தீரவேண்டியது தான் ஜெயிலுக்கு.

• • •

இதெல்லாம் கஷ்டமான விஷயந்தான். ஆனாலும் எல்லாவற்றையும் விட ஒரு பெரிய கொடுமைக்கு ராஜாஜி உள்ளாக வேண்டியிருந்தது.

உலகத்தில் யாருக்கும் சொந்த பாஷை என்றும் சொந்தப் பண்பாடு என்றும் உண்டு. அவைகளை உத்தேசித்து உயிரை விட மக்கள் தயாராய் இருக்கிறார்கள். ஏன், யுத்தங்கள் அனேகமாய்ப் பண்பாட்டை உத்தேசித்தே ஆரம்பமாகின்றன.

தமிழ்நாட்டின் பண்பாடோ தனித்த பெருமை வாய்ந்தது. கலைகளின் உயர்வும் சமயத்தின் அழகும் தமிழ் நாட்டு மக்களை அபூர்வமான ஆனந்த வாழ்க்கைக்கு உள்ளாக்கி வளர்த்து வந்திருக்கின்றன. தமிழ் மக்களும் நெடுகிலும் அந்தப் பண்பாட்டை பக்தியுடனும் திறமையுடனுமே காப்பாற்றி வந்திருக்கிறார்கள். அப்படிக் காப்பாற்றி வந்தவர்களுக்கு நாம் நன்றி செலுத்தி முடியாது. ஏதேனும் நன்றி செலுத்துவது உண்டென்றால் அவர்களது அடிச்சுவட்டைப் பின்பற்றி அந்தப் பண்பாட்டை வளர்ப்பதுதான்.

இந்த முறையில் தமிழ்ப் பண்பாட்டை எல்லாத் துறைகளிலுமே வளர்க்க வேண்டும் என்று ஆத்திரம் கொண்டிருந்தார்கள் ராஜாஜி. தமிழகத்திலிருந்து தமிழர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று ஆர்வம் கொண்டிருந்தார்கள்.

அந்த ஆர்வம் நிறைவேறாமல்ச் செய்வதற்கு என்னவெல்லாமோ எதிர்பாராத காரணங்கள் ஏற்பட்டன. நண்பர்கள் பலர் எதிரிகளைப்போல்க் காரியம் செய்தார்கள். பிற்பாடு பழையபடி நண்பர்களாகி விட்டார்கள். ஆனால் அந்தச் சமயத்திற்கு ராஜாஜி தமிழ் நாட்டில் இருந்து தொண்டு செய்தல் இயலாத காரியம் ஆகிவிட்டது. இதனால் ராஜாஜியின் உள்ளம் எத்தனையோ துன்பத்துக்கு உள்ளாயிற்று. தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் சேவை செய்ய முடியவில்லையே என்ற துன்பம் ஒரு பக்கம்; நெடுநாளைய நண்பர்கள் இந்தவிதமாக நடந்து கொண்டார்களே என்ற துன்பம் ஒரு பக்கம்.

இத்தனை விதமாகத் தங்கத்துக்குத் துவைச்சல் ஏற்ற வேண்டியிருந்தது; அப்படித் துவைச்சல் ஏற்றிய காரணமாகத் தங்கம் இப்போது பத்தரை மாற்றுத் தங்கமாகப் பிரகாசிக்கிறது. பாரத மாதாவின் சிரசில் அரிய மகுடமாக விளங்குகிறார்கள் ராஜாஜி.

• • •

ராஜாஜிகள் தமிழ்நாட்டில் பூர்வத்திலும் இருந்திருக்கிறார்கள். இரண்டாயிரம் வருஷத்துக்கு முன் அவர்கள் வளமாய் இருந்திருப்பார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. இதற்குத் திருவள்ளுவர் வாய்மொழியில் சான்று இருக்கிறது.

புடம் வைக்க வைக்கப் பொன் நன்றாகப் பிரகாசிக்கும் காட்சியைத் திருவள்ளுவர் பார்த்திருக்கிறார்.

உயர்ந்த லக்ஷியங்களில் கருத்தை வைத்துச் சாதனம் செய்கிறவர்களுடைய (நோற்கிற்பவர்) உள்ளத்தைப் புடம் போடுவது எப்படி என்பதையும் அறிந்திருக்கிறார். இரண்டையும் ஒப்பிட்டுத் திருவள்ளுவர் சொல்கிறார்.

"சுடச்சுடரும் பொன்போல்,—
ஒளிவிடும், துன்பம்
சுடச்சுட நோற்கிற்
பவர்க்கு.

[சுட: புடம் போடப் போட; சுடரும்: பிரகாசிக்கும், மாற்று உயரும்; பொன்போல்: தங்கத்தைப் போல்; ஒளி விடும்: உண்மை பிரகாசிக்கும்; துன்பம் சுடச்சுட: துன்பத்தில் வைத்துப் புடம் போடப் போட; நோற்கிற்பவர்க்கு: உயர்ந்த லக்ஷியத்திற்காகச் சாதனத்தை மேற் கொள்பவர்களுக்கு.]

துன்பத்தின் மூலமாக அரிய ஆழமான உண்மைகள் உள்ளத்தில் பிரகாசிக்கும் என்று திருவள்ளுவர் சொன்னார். அந்தச் சொல்லுக்கு வியாக்கியானம் வேண்டாமா? அதுதான் ராஜாஜி.

# ஸ்ரீரங்கத்து யானையின் தீர்க்கதரிசனம்



1945-ம் வருடத்தில் ராஜாஜி அவர்கள் ஸ்ரீரங்கத்துக்கு விஜயம் செய்த போது, ஸ்ரீ ரங்க நாதர் கோவில் யானை ராஜாஜிக்கு மாலை சூட்டி வரவேற்றது.

# சிமெண்டு வேண்டியது கிடைக்கும்

**வாகனக் கஷ்டங்கள் இருந்தபோதிலும் உங்கள் தேவையை பூர்த்திசெய்ய நாங்கள் கூடிய அளவு முயற்சித்தே வருகிறோம்.**

ஆலைகளில் சிமெண்டுக்குப் பஞ்சமில்லை யென்றும், ஆனால் வாகனக் கஷ்டங்கள் விநியோகத்தை தடை செய்கிற தென்றும் முந்தியவோர் அறிவிப்பில் விளக்கினோம்.

இந்த கஷ்டங்களுக்கு நாங்கள் கீழ்ப்படிவதில்லை' சிமெண்டு கடத்தும் பொறுப்பு பெரிதளவு இன்னும் ரயில்களே நிர்வகித்தாக வேண்டுமானாலும், மற்ற மேலேய போக்குவரத்து மார்க்கங்களையும் நாங்கள் முற்றிலும் பயன்படுத்தியே வருகிறோம். சிமெண்டு ஜலமார்க்கமாக — கரையோரம் கடல் வழியாகவும் உள் நாட்டில் ஆறு, கால்வாய்கள் வழியாகவும் — கடத்திச் செல்லப்படுகிறது; பெரிய கப்பல்கள் மூலம் மட்டுமன்று, சாதா மரக் கலன்களும் முக்கிய மாக உதவி வருகின்றன. அதேபோல் ரஸ்தா போக்கு வரத்தையும் — லாரி, மாட்டு வண்டியோடல்லாமல் கோவேறு கழுதை, ஒட்டகம், தலைச்சுமைகூட — நாங்கள் கூடியவரை உபயோகப்படுத்துகிறோம்.

ஒரு காரியம் நீங்கள் நிச்சயமாக நம்பலாம். உண்மை தேவையாளர்கள், பெர்மிட்டும் வாங்கி, தொழிற் சாலைகளிலேயே சரக்கு டெலிவரி வாங்கிக் கொள்ள

வெளியிடு

தி சிமெண்டு மார்க்கெட்டிங்



வும், சொந்த ஏற்பாட்டிலேயே ரஸ்தா வழியாக கடத்திக் கொண்டு போகவும் தயாரானால், அவர்கள் ஆவசியம் நிறைவேற்ற எங்களுக்கு பூர்ண சந்தோஷந்தான்.

இவ்விளம்பரத்தின் உத்தேசம் சிமெண்டு உபயோகிப்பவர்களுக்கு உண்மை நிலைமையை விளக்கவும், நிலைமை சீராகும்வரை தங்கள் ஆவசியங்களை உடனடித் தேவைகளின் அளவுக்கு மட்டுப்படுத்திக் கொள்வதில் அவர்கள் உதவி கோரவும் செய்வதேயாகும். அதற்கிடையே எல்லோருக்கும் நியாயமான முறையில் சேவை புரிய நாங்கள் கூடிய அளவு முயற்சித்துத்தான் வருகிறோம்.

பவர்கள் :

கம்பெனி ஆப் இந்தியா, லிமிடெட்

# ராஜரிஷி

[க. சந்தானம், அங்கத்தினர். இந்தியா பார்லிமெண்ட்]

நமது பழைய புத்தகங்களில் ராஜ ரிஷிகளைப் பற்றிப் படித்திருக்கிறோம். மாளிகையில் இருந்து, மன்னன் வாழ்க்கையை வழக்கம்போல் நடத்தி, ஆனால் ஆசையையும் அகங்காரத்தையும் துறந்து உலக நன்மை ஒன்றையே நாடிச் செங்கோல் புரியும் மன்னனுக்கு 'ராஜ ரிஷி' என்னும் புனித பட்டத்தை நம் பெரியோர் சூட்டினர்.

காந்தியடிகள் சிருஷ்டித்திருக்கும் சுதந்திர இந்தியாவில் வேறுவிதமான ராஜ ரிஷிகளுக்கு அவசியம் நேரிட்டிருக்கிறது. தேசத் தொண்டே தமது பணியாகக் கொண்ட இந்தியத் தலைவர்கள் தமது எளிய வாழ்க்கையை விட்டுப் பெரிய மாளிகைகளில் வசித்து அவற்றில் பற்றுக் கொள்ளாமல் நாட்டின் பெருமையையும் காந்தியடிகளின் உபதேசங்களையும் ஏக காலத்தில் நிலைநிறுத்திச் சேவை செய்ய வேண்டிய அவசியம் நேரிட்டிருக்கிறது.

சிம்மாசனத்தைத் துறந்து காட்டில் தவம் புரியச் செல்வது விசுவாமித்திரருக்கு எளிதாக இருந்தது. ஆனால் தவம் புரியும் காலத்தில் மேனகையின் மோக வலையில் சிக்கிக் கொண்டார்.

அரசியல் துறையில் எவ்வளவு சிரம சாத்தியமான காரியத்தையும் தாமே வலுவில் ஏற்றுக்கொண்டு, அவதூறுக்கு அஞ்சாமல், கீர்த்தியைக் கோராமல், பற்றற்றுத் திறம்படச் செய்வதும், காரியம் ஆனவுடனே தாமே விட்டு விலகுவதும் ராஜாஜியின் சுபாவமாகி விட்டது.

ராஜாஜி வங்காளக் கவர்னராக நியமிக்கப்பட்டார் என்று கேட்டதும் எனக்கு மிகவும் வருத்தமா யிருந்தது. மத்திய சர்க்காரில் பொக்கிஷ மந்திரியின் அதிகாரம் பிரதம மந்திரியின் அதிகாரத்திற்கு ஏறக்குறையச் சமமானது. அதை விட்டுக் கவர்னராகப் போவது ராஜாஜியின் அறிவையும் திறமையையும் வீணாக்குவ தாகுமென்று தோன்றிற்று. தவிர, பிரிட்டிஷ் அரசாங்கத்தில் கவர்னர் மாளிகையும், பந்தோபஸ்தும், ஆடம்பரமும் இந்திய சமஸ்தான சிற்றரசர்களும், கோடீசுவரர்களும் கண்டு மயங்கவும், சாதாரண மக்கள் நடுங்கவும் ஏற்படுத்தப்பட்டன. அத்தகைய மாளிகையில் கைதியாகி, வங்காளிகளின் கூரிய சொல்லம்புகளுக்கும் இவர் ஏன் இலக்காக வேண்டுமென்று நினைத்தேன்.

மத்திய சர்க்காரை ராஜாஜி விட்டது சரிதானென்று இன்னும் நான் ஒப்புக் கொள்ளத் தயாரா யில்லை. ஆயினும், வங்காளத்தின் மனதைச் சென்ற பத்து மாதங்களில் முற்றிலும் கவர்ந்துவிட்டார் என்பதில் சந்தேகமில்லை. சமீபத்தில் நான் கல்கத்தா போயிருந்தபொழுது பல வங்காளிகளைக் கேட்டேன். அவர்களில் சிலர் அவர் நியமனத்தை ஏற்கெனவே பலமாக ஆக்ஷேபித்தவர்கள். ஆனால் இப்போது அனைவரும் அவர் வங்காளத்திற்குக் கவர்னராக வந்தது அம்மாகாணத்தின் பேரதிர்ஷ்டமென்று ஏகோபித்துக் கூறினர்.

ராஜாஜி பதவி ஏற்ற சமயத்தில் கல்கத்தாவில் முன் வருஷம்போல் இந்து-முஸ்லிம் கலகம் ஏற்படும் என்று தோன்றியது. அதிர்ஷ்டவசமாக காந்தியடிகள் அப்பொழுது கல்கத்தாவி லிருந்தார். உபவாச விரதம் பூண்டு அதைத் தடுத்து இந்து-முஸ்லிம் ஒற்றுமையை ராஜாஜியிடம் ஒப்புவித்து டில்லி சென்றார். பஞ்சாப் மாகாணத்திலும், டில்லியிலும், இதர பாகங்களிலும் இந்து முஸ்லிம் பகை எல்லை மீறித் தாண்டவமாடி ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்றது. லக்ஷக்கணக்கான ஜனங்கள் தாம் பிறந்து வளர்ந்த நாட்டையும், பாடுபட்டுச் சம்பாதித்த சொத்தையும் விட்டு அநாதைகளாக உயிர் பிழைத்தாலே பெரிதென்று ஓடிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது இக்கலகத்திற்கு மூலஸ்தானமான கல்கத்தாவிலும், வங்காளத்திலும் சமாதானமும் சகோதரபாவமும் ஓங்கி நின்றதற்குக் காரணம் காந்தியடிகளின் உபதேசத்தைத் திறமையாக நடத்தி வைப்பதற்கு ராஜாஜி அங்கிருந்ததே.

சென்ற முப்பது வருஷங்களில் ராஜாஜியின் தொண்டைப் பற்றிக் கூற வேண்டுமானால், இந்தியாவின் அரசியல் சரித்திரத்தையே எழுதவேண்டும். வருங் காலத்துச் சரித்திரக்காரர்கள் காந்தியடிகளின் அபூர்வ சக்திகளைச் சீர்தூக்கிப் பார்க்கும் பொழுது, மந்திரவாதிபோல் திடீரென்று தம் காரியத்திற்கு வேண்டிய மகா புருஷர்களைச் சிருஷ்டி செய்ததைக் கண்டே ஆச்சரிய மடைவார்கள்.



கல்கத்தா சர்வகலாசாலை அத்தியட்சகர் பட்டமளிப்புவிழாவுக்கு விஜயம் செய்கிறார்.

ஜவஹர்லால்நேரு, வல்லபாய் படேல், ராஜேந்திரப்பிரசாத், சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் இவர்களைப் பற்றி 1918-ல் ஒருவரும் கேட்டதில்லை. அடுத்த ஐந்து வருஷத்தில் அவர்கள் கீர்த்தி நாடெங்கும் வியாபித்து விட்டது.

இப்பெரும் தலைவர்களின் தாரதம்மியத்தைப் பற்றிச் சர்ச்சை செய்வது வீண் வேலையாகும்.

ஆனால் இவர்களுக்குள் ராஜாஜியின் சரித்திரம் சற்று விசித்திரமானது. 1920-ல் கல்கத்தா விசேஷ காங்கிரசில், தமிழ்நாட்டுப் பிரமுகர்கள் ஏகோபித்து எதிர்த்தும் ஜனங்கள் எல்லோரையும் காந்தி பக்கம் அவர் திரட்டினார். கயா காங்கிரசில் இந்திய சிங்கங்கள் சித்தரஞ்சன தாஸ், மோதிலால் நேரு கர்ஜிக்க அவர்களை எதிர்த்து ஒரு கடும் சொல்லின்றி, சிந்தனையின் தெளிவாலும் மன உறுதியாலும் வெற்றி பெற்றார்.

பண்டித ஜவாஹர்லால் நேரு சிறையிலிருந்து வெளிவந்தவுடன் தலைமைப் பதவியை அவரிடம் ஒப்புவித்துத் தாம் பின் நின்றார். தமிழ்நாட்டில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ஆரம்பப் பள்ளி நடத்திக் குடியானவர்களுடன் கூடிக்குலாவினார். உப்பு சத்தியாக்கிரகத்திற்குத் திருச்சியிலிருந்து வேதாரண்யம்வரை தொண்டர் படைக்குத் தலைமை வகித்துக் கால் நடையாகச் சென்றார். அரசியலிலிருந்து வெளி நின்று வேதாந்தம், தேவாரம், திருவாய் மொழி படித்துக் காலங் கழித்தார். திரும்பி வந்து சென்னைப் பிரதம மந்திரியானார்; அதற்குப் பிறகு காந்தியடிகளைக்கூட எதிர்த்து முஸ்லிம்களோடும், பிரிட்டிஷாரோடும் சமரசம் செய்து கொள்ள வேண்டுமென்று பிடிவாதம் செய்து, பேரவதூறுக்குப் பாத்திரமானார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல் சென்னையில் அவருக்கு ஏற்பட்ட எதிர்ப்பின் காரணமாக பாரத நாட்டின் மந்திரி சபையில் புகுந்தார். அங்கிருந்து வங்க கவர்னராகி டில்லிக்கு கவர்னர் ஜெனரலாக மீண்டார். இதையெல்லாம் நினைத்தால் அழுக்காறில்லாத மனமுடையோர் வியப்படைவர். இக்கட்டம் ஒவ்வொன்றிலும் ராஜரிஷியின் போக்கைப்பற்றி அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம். ஆனால் அவருடைய மனோதிடத்தையும் புத்தி சாதுர்யத்தையும் தூரதிருஷ்டியையும் பற்றற்ற சாந்த நடுநிலைமையையும் மாசற்ற வாழ்க்கையையும் பற்றி எவ்வித அபிப்பிராய பேதத்திற்கும் இடமில்லை. அவரை இக்காலத்திய ராஜரிஷி என்று கூறுவது முற்றிலும் பொருந்தும்



# கல்கத்தாவில் பிரதம விருந்தாளி



# கல்கத்தாவில் பிரபல விருந்தினர்

# கவர்னர் ராஜாஜி

டி. எஸ். சீதாபதி, தலைவர், பாரதி தமிழ்ச்சங்கம், கல்கத்தா

1947 ஜூலை மாதத்தில் எங்கள் சங்கத்தில் ராஜாஜியின் உருவப்படத் திறப்பு விழாக் கொண்டாடுவதாகத் தீர்மானித்தோம். இந்தத் தீர்மானம் செய்த போது ராஜாஜி மத்திய சர்க்கார் மந்திரியாக இருந்தார். மேற்கு வங்காள கவர்னராக அவர் நியமிக்கப்படுவார் என்று நாங்கள் கனவிலும் எண்ணவில்லை.

அந்த சமயம் ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் சாந்திநிகேதன் செல்லுவதாய்த் தகவல் கிடைத்தது. ரஸிகமணி அவர்கள் எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி ராஜாஜி படத் திறப்பு விழாவை நடத்தி அதை அமோகமாக்கினார்கள். ராஜாஜி கவர்னராக வருவதற்கு ஒரு வாரத்திற்கு முன்பு இந்த விழா நடந்தது. இதுவரை பார்க்காததும் இனிப் பார்ப்பதற்கு அரிதாயு முள்ள முறையில் ராஜாஜி படத்திறப்பு விழா எங்கள் சங்கத்தில் நடந்தது. இப்படி ஆரம்பித்த விழா பிற்பாடு ராஜாஜியின் பிறந்த தினக் கொண்டாட்டமாகத் தமிழ் நாட்டிலும் மற்ற இடங்களிலும் நூற்றுக் கணக்கான ஸ்தாபனங்களால் கொண்டாடப்பட்டது.

ராஜாஜிக்கும் எங்கள் சங்கத்துக்கு முள்ள பரஸ்பர அன்புதான் அவரைக் கவர்னராகச் சில மாதங்கள் எங்கள் நகரத்தில் தங்கும்படி செய்ததோ வென்று இப்போது நினைக்கிறோம். ஆனால் அவருக்குக் கவர்னர் பதவி ஏற்பட்ட சமயம், அது மகிழ்ச்சி கொடுக்கக் கூடியதா அல்லது கவலைக்கிடமானதா வென்று சொல்வதற்கில்லாமலிருந்தது. அப்பொழுது வங்காளம் இருந்த நிலைமை அப்படி. உணவுப் பஞ்சத்தில் அடிபட்டு, முஸ்லிம் லீக் ஆட்சியில் மிதிபட்டுக் கிடந்த வங்காளத்தில் 1946 ஆகஸ்டு மாதம் ஹிந்து முஸ்லிம் வகுப்புத் துவேஷ அசுரன் கோர தாண்டவம் புரிய ஆரம்பித்தான். இந்தத் தாண்டவம் முக்கியமாகத் தலை நகரான கல்கத்தாவில் நடந்தது. அந்தக் காலத்தில் ஒவ்வொரு நாள் போவதும் ஒரு யுகமாயிருந்தது. பிறகு வங்காளப் பிரிவினை நிச்சயமாகி அதனால் கலவரங்கள் அதிகமாயின. துப்பாக்கியிலும் நாட்டுக் குண்டுகளிலும் கிளர்ச்சிக்காரர்கள் அதிக ஊக்கம் காட்ட ஆரம்பித்தார்களே ஒழியச் சமாதானப் பேச்சு எங்குமே கிடையாது. ஒரு காலத்தில் இணையற்ற கலகலப்போடு விளங்கிய கல்கத்தா நகரம் இந்தக் கலவரங்களினால் நரகமாகவே தோற்றமளித்தது. இந்த சந்தர்ப்பத்தில் வங்காளத்தைக் காப்பாற்றுவதற்காக உயிரையே தியாகம் செய்யத் தயாராய்க் காந்தியடிகள் கல்கத்தாவில் முகாம் போட்டு சமரசத்துக்காகப் பகீரதப் பிரயத்தனம் செய்தார்கள். எழுத்தால் கூட எழுத அவமானப்படும்படி சில இளைஞர்கள் காந்தி மஹானின் பேரில் கற்களை விட்டெறியத் துணிந்தார்கள். அநேகர் காந்தியடிகளின் பிரசாரம் தேசத்துக்குக் கெடுதல்தான் செய்யுமென்று பகிரங்கமாய்ச் சொல்லி வந்தார்கள். இந்த நிலையில் எவரும் மேற்கு வங்காளத்துக்குக் கவர்னராய் வருவதென்றால் ஒப்புக் கொள்வார்களா? யாரோ சிலர் மறுத்து விட்டதாகக் கேள்விப் பட்டோம். வங்காளம் இருந்த நிலைமைக்கு ஈசுவராம்சம் பொருந்திய ஒரு க்ஷத்திரியர்தான் அப்பதவியை ஒப்புக் கொள்ள முடியும். நமது ராஜாஜியை அணுகினார்கள், அவரும் சம்மதித்தார். அவர் அந்தப் பெரும் பதவியை ஏற்றுக் கொண்டதில் கல்கத்தா தமிழர்களாகிய எங்களுக்கு சந்தோஷம் ஒருபுறம்; அச்சமும் கவலையும் இன்னொருபுறம்.

1947 ஆகஸ்டு 14-ம் தேதியன்று ராஜாஜி அவர்கள் கல்கத்தாவுக்கு வந்த அன்று இரவு முதல் அவ்விடம் தாண்டவமாடின கலகங்கள் எப்படி மறைந்துபோயின என்பதும், எதிர்பாராதபடி சுதந்திர தினக் கொண்டாட்டங்கள் எப்படி விமரிசையாய் நடந்தன வென்பதும் நேரில் பார்த்து அனுபவித்தவர்களைத் தவிர மற்றவர்களுக்குக் கட்டுக் கதையாய்த் தோன்றலாம். "ஆனந்த நகரம்" என்ற தலைப்பின் கீழ் கல்கி ஆசிரியர் எழுதியிருந்த ஒவ்வொரு வார்த்தையும் சத்தியம் உண்மை என்பதை இச்சமயத்தில் ஊர்ஜிதம் செய்கிறேன்.

கவர்னர் பதவி ஏற்றசில தினங்களுக்குள் மஹாத்மா அவர்கள் உண்ணாவிரதம் மேற்கொள்ளும்படியான துர்ப்பாக்கியம் கல்கத்தாவுக்கு உண்டாயிற்று. துவேஷத்தையும்

அமைதியற்ற நிலைமையும் உண்டாக்குவதிலேயே நோக்க முள்ளவர்களைக் கூட வழிக்குக் கொண்டுவந்து, நாள்க் கணக்காய் உழைத்து எல்லோருக்கும் திருப்திகரமாகவும் காந்தியடிகளும் ஒப்புக் கொள்ளும்படியாகவும் ஒப்பந்தத்தைப் பூர்த்தி செய்து மறுபடியும் அசைக்க முடியாதபடி சமாதானத்தை நிலைநாட்டியது எங்கள் கவர்னர் ராஜாஜிதான். இந்தச் சம்பவத்திலிருந்து அவருக்கு விரோதமாய்ப் பிரசாரம் செய்தவர்கள் இருந்த இடமே தெரியவில்லை. நாளுக்கு நாள் அவர்மீது புகழ் மாலைகள் பொழிய ஆரம்பித்தன. ராஜாஜியின் ஜோதி மாகாணம் முழுவதும் பரவியது. எல்லோரையும் சமமாகப் பாவித்து எல்லாவிதமான விழாக்களிலும் கலந்து கொண்டு அன்பிலும் அறிவிலும் நகைச்சுவையிலும் நிறைந்த பிரசங்கங்களை ராஜாஜி நிகழ்த்தினார். வரவர வங்காளிகள் அவரை நேசிக்க ஆரம்பித்தார்கள். விஷமப் பிரசாரம் செய்தவர்கள் வருந்தினார்கள்.

"எத்தனையோ விஷயங்களில் தமிழ் நாடு வங்காளத்துக்குக் கடமைப் பட்டிருக்கிறது. சுவாமி விவேகானந்தர், ரவீந்திரநாத டாகூர், விபின்சந்திரபால், தேசபந்து தாஸ் முதலியோர் தமிழ் மக்கள் விழித்தெழக் காரணமாயிருந்தார்கள். அந்தக் கடனுக்கெல்லாம் வட்டியும் முதலுமாக ராஜாஜியை வங்காளத்துக்குத் தமிழ் நாடு அளித்திருக்கிறது" என்பதாகக் 'கல்கி' ஆசிரியர் எங்கள் சங்கத்தின் கூட்டத்தில் சொன்னார். "நாம் இதைச் சொல்வது சரி; ஆனால் வங்காளிகள் ஏற்றுக் கொள்ளுவார்களா?" என்று அந்த சமயம் நான் யோசித்தேன். பத்துமாத அனுபவத்துக்குப் பிறகு கல்கி ஆசிரியர் சொன்னதற்கு மேலாகவே வங்காளம் ராஜாஜியை ஏற்றுக் கொண்டு விட்டதென்று திண்ணமாய்ச் சொல்லுவேன். ராஜாஜி வந்ததினால் உண்டான அனுகூலங்களை வங்காளிகள் நன்கு உணர்ந்து பகிரங்கமாகப் பாராட்டிப் பேசி, எழுதியிருக்கிறார்கள். சமீபத்தில் எங்கள் சங்கத்தின் ஆதரவில் டாகூர் விழா நடந்தது. அதில் பங்கெடுத்துக் கொண்ட பிரபல வங்காள பத்திரிகை 'ஜுகாந்தர்' ஆசிரியரான ஸ்ரீ விவேகானந்த முகர்ஜி அவர்கள் ராஜாஜியைப் பற்றிப் பெருமையாய்ப் பேசி விட்டு, "வங்காளத்தைக் காப்பாற்றிப் புத்துயிர் கொடுக்க வந்த மஹான் ராஜாஜி" என்று உருக்கமாய்ப் பேசினார். தம் பத்திரிகையிலும் அதேமாதிரி எழுதினார். விஷயம் தெரிந்த வங்காள அறிவாளிகளெல்லாம் இதே அபிப்பிராயத்திலிருக்கிறார்கள். "நம் மாகாணத்தை விட்டு ராஜாஜி போய் விடுகிறாரே?" என்று பெரும்பாலான வங்காளிகள் கவலையும் படுகிறார்கள்.

மகத்தான தேசியப் பிரச்னைகளிலும் மாகாண நிர்வாகத்திலும் ஈடுபட்டிருந்தாலும் எங்கள் பாரதி தமிழ்ச் சங்கத்தின் விஷயங்களில் ராஜாஜி அவர்கள் எடுத்துக் கொள்ளும் சிரத்தையைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டும். சென்ற ஆண்டு வரையில் தமிழையும் தமிழ்த் தலைவர்களையும் மட்டும் நாங்கள் கொண்டாடி வந்தோம். எங்களைப் புது வழிகளில் பிரவேசிக்க வேணுமென்று வழி காட்டியது ராஜாஜிதான். அவர் கவர்னர் பதவி ஏற்ற சில வாரங்களுக்குப் பின் நாங்கள் சந்தித்த போது சில புத்திமதிகள் சொன்னார். தம்மை அடிக்கடி பாரதி சங்கத்தார் எதிர் பார்ப்பது உசிதமல்லவென்றும் உள்ளூர்ப் பிரமுகர்களைச் சங்கத்தில் வரவழைத்துப் பெருமைப் படுத்த வேண்டுமென்றும் அவர் சொன்னதை ஏற்றுக் கொண்டு சென்ற ஆண்டு பாரதி ஜயந்தி விழாவுக்கு கல்கத்தா சர்வ கலா சாலையில் பிரபல ஆசிரியரான டாக்டர் காளி தாஸ் நாக் அவர்களை வரவேற்றோம். பிறகு கவி டாகூரின் ஜயந்தியை விசேஷமாய்க் கொண்டாடப் பிரபல வங்காள ஆசிரியர்களையும் வரவழைத்தோம். யாருடைய மத்தியில் வாழுகிறோமோ அவர்களுடைய பாஷையை நாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமென்ற நோக்கத்தில் வங்காள பாஷை வகுப்பும் சங்கத்தில் ஆரம்பித்திருக்கிறோம். இவையெல்லாம் வங்காளிகளுக்குத் தென்னிந்தியர்கள் பேரில் இருந்த விரோதபாவம் நீங்கவும் நேசமனப்பான்மை ஏற்படவும் காரணமாகின்றன.

ராஜாஜியை நெருங்கிப் பார்த்துப் பேசும் பாக்கியம் கிடைத்த நாங்கள் அவரை உன்னதமான கர்மயோகியாகவே பார்க்கிறோம். அவருக்கு ஏற்படும் பதவிகளினால் அவருக்கு உத்ஸாகமோ, வருத்தமோ, ஏற்படுவதில்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அவர் நடத்திவைக்கும் காரியங்களும், உண்டாக்கும் அன்பும், மற்ற எல்லாச் சிறப்புகளும் தேசத்துக்கே உரியவை. முக்கியமாக அவருக்கு ஏற்படும் பெருமைகளெல்லாம் எங்கள் பாரதி தமிழ்ச் சங்கத்துக்கும் சேர்ந்தனவென்று எண்ணி நாங்கள் மகிழ்ச்சி யடைகிறோம்.

## துருப்புச் சீட்டு!



# தமிழ் நாட்டின் தவப்பயன்

சர்தார் வேதரத்தினம் எம். எல். ஏ.

உலகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கிடையில் மகாத்மா காந்தி போன்ற ஒரு மகான் பிறந்ததில்லை. அதுபோன்ற பல நூற்றாண்டுகளுக்கிடையில் நம் ராஜாஜி போன்ற தத்துவஞானி தமிழ் நாட்டில் பிறந்த தில்லை. இது அகில இந்தியாவிற்குமே ஓரளவு பொருந்தும். ராஜாஜியின் உத்தம வாழ்க்கை, அரிய மேதை, தூரதிருஷ்டியுடன் கூடிய உன்னதச் செயல்கள் இவைகளைக் கூர்ந்து நோக்குங்கால் வசிஷ்டர் போன்ற மகரிஷிகளின் நிலையில் சேர்ந்தவர் ராஜாஜி என்று நிச்சயிக்கலாம்.

காந்தியடிகள் இந்தப் பாரத நாட்டின் விடுதலைப் போராட்டத்திற்கு வகுத்த அஹிம்சா தர்ம ஆயுதம், நிர்மாண திட்டமேயாகும். அந்தத் திட்டம் அந்த மகான் பிறந்த குஜராத் மாகாணத்தைக் காட்டிலும் தமிழ்நாட்டில் அதிகம் நிறைவேறியிருக்கிறது. கதர், மதுவிலக்கு, தீண்டாமை விலக்கு முதலிய திட்டங்கள் நம் மாகாணத்தில்தான் தீவிரமாய் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. சர்தார் வல்லபாய் போன்ற பெரியோர்கள் தாங்கள் பிறந்த மாகாணத்தில் இத் திட்டங்களை நிறைவேற்ற நம் மாகாணத்தைச் சுட்டிக் காட்டி உபதேசிக்கும் நிலைமைக்கு இந்த மாகாணத்தை உயர்த்திய பெருமை நம் ராஜாஜியையே சாரும்.

நெடுங்காலம் ராஜாஜியின் வாசஸ்தலமாயிருந்த திருச்செங்கோடு காந்தி ஆசிரமம் தமிழ்நாட்டு நிர்மாண வேலைகளுக்கு ஆரம்ப கேந்திர ஸ்தலமாகும். ராஜாஜி பிறந்த சேலம் ஜில்லாதான் மதுவிலக்குத் திட்டத்தில் முதல் இடம் பெற்றது.

* * *

1929-ம் ஆண்டில் லாகூரில் ரவி நதிக் கரையில் பண்டிட் ஜவஹர்லால் நேரு தலைமையில் காங்கிரஸ் கூடியது. நேரு அறிக்கையை பிரிட்டிஷ் அரசாங்கம் ஒத்துக் கொள்ளாததால் பூர்ண சுயேச்சைத் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றத் தகுந்த காலம் வந்து விட்டதென பண்டித மோதிலால் நேருவே அத் தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றினார். அரசாங்கத்துடன் போர் துவக்கும் வேலை காந்தியடிகளிடம் ஒப்புவிக்கப்பட்டு அவருக்கு எல்லா அதிகாரங்களும் அளிக்கப்பட்டன. அடிகள் உப்புப் போருக்கு அடிகோலினார். தமிழ் நாட்டின் நிலை அச்சமயம் பரிதபிக்கத் தக்கதாயிருந்தது. அப்போரைத் துவக்கி நடத்த அது வரை மாகாணக் காங்கிரஸின் நிர்வாகத்தைத் தாங்கிய எவரும் முன் வரவில்லை. போர் முரசு ஒலிக்கவே காங்கிரஸின் அன்றாட நிர்வாகத்தை நடத்தவும் எவரையும் காணோம்.

அத்துடனில்லாது அது வரை சேர்ந்திருந்த காங்கிரஸ் நிதி சுமார் ஒரு லக்ஷம் ரூபாயையும் காணோம்! (துர் விநியோகமாகி விட்டதாக அஞ்ச வேண்டாம். காங்கிரஸ் மாளிகை கட்டுவதற்கென ஒரு கமிட்டி அமைத்து அக் கமிட்டியிடம் தொகை முழுதும் ஒப்படைக்கப் பட்டது.) இந் நிலைமையில் முன்னேற்பாடு திட்டம் எதுவுமில்லாத போதிலும் ராஜாஜி பொறுப்பை ஏற்றுப் போர் நடத்தத் தயங்காது முன் வந்தார். தமிழ் நாட்டின் காங்கிரஸ் தலைமையை ஏற்றார். காலந் தாழ்த்தாது கடமையில் புகுந்தார். கடற்கரை யோரங்க ளெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்து பார்த்தார். மற்ற இடங்களைக் காட்டிலும் வேதாரண்யம் அவர் மனதைக் கவர்ந்தது. இதற்கு இரு காரணங்கள். ஒன்று 150 சதுர மைல் விஸ்தீர்ணமுள்ள உப்பளத்தில் பல லக்ஷக் கணக்கான மணங்கு உப்புத் தானாக விளைவது. மற்றொன்று இப் பிரதேசங்களிலுள்ள மக்கள் எவ்வளவு ஆத்திர மூட்டிய போதிலும் பலாத்காரத்தில் இறங்க மாட்டார்களென்ற நம்பிக்கை.

உண்மையான சேவை செய்யுமிடத்தில் பணக் கஷ்டம் தோன்றாது என்று சத்திய சோதனையில் மகாத்மா குறிப்பிட்டபடி உண்மைத் தொண்டை ராஜாஜி துவக்கியதும் நாலாபக்கங்களிலிருந்தும் உதவி வந்து குவிந்தது. நன்கொடைகளும் தொண்டர் முகாமுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் பம்பாய், ரங்கூன் முதலிய இடங்களிலிருந்துகூடப் பண முடிப்புகளும் வரத் தொடங்கின. பேர் ஊர் தெரியாத

இடங்களி லிருந்தெல்லாம் உணவு தானிய வகைகள் வந்து குவிய ஆரம்பித்தன. இவைகளைச் சேமித்து வைக்க இடம் தேடுவதுதான் எங்களுக்குப் பெரும் சிரமத்தை உண்டாக்கி விட்டது.

தொண்டர் படைக்கு ஆள் பொறுக்குவதிலும் ராஜாஜி எப்படியாவது வந்தவர்களை யெல்லாம் சேர்த்து ஒரு பெரும் படை திரட்டிப் போரை ஆடம்பரமாக நடத்த மனம் கொள்ளவில்லை. 'கலாசாலை மாணவர்கள், B. A. வகுப்புப் படித்துக் கொண்டிருந்தவர்கள் பலர் வந்து ராஜாஜியிடம் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினர். டாக்டர் ராஜன் பங்களா வாசலில் படுத்துக் கொண்டு சத்தியாக்கிரகம் செய்தார்கள். சத்தியாகிரகத் தலைவரிடத்திலா தொண்டர்கள் சத்தியாக்கிரகம் பலிக்கும்? படிப்பை முடிக்கும் தறுவாயி லுள்ள மாணவர்கள், குடும்பத்தை ரக்ஷிக்க வேறு மனுஷ்யர் இல்லாதவர்கள், உறுதி யற்றவர்களெனத் தோன்றியவர்கள், அப் படையில் இடம் பெற முடியவில்லை.

தொண்டர் படை திருச்சி ஜில்லா தாண்டி தஞ்சை ஜில்லா எல்லையை அடைந்ததும் அப்போது ஜில்லாக் கலெக்டராக இருந்த தாரன் துரை தொண்டர்களிடையே தளர்ச்சியை யூட்டவும், வரும் வழியில் அவர்களுக்கு ஜீவாதாரமான உணவு கிடைக்காமல் செய்யவும் 157வது செக்ஷன்படி சத்தியாக்கிரகிகளுக்கு உணவு முதலிய எவ் வசதி யளிப்பதும் சட்ட விரோதமானதென்று அறிக்கை வெளியிட்டார். துண்டுப் பிரசுரங்கள் வழங்கினர். வீடு தோறும் அதிகாரிகளைக் கொண்டு இதைச் சொல்லிப் பயமுறுத்தினர். கடந்த யுத்தத்தில் உணவு சப்ளைத் தடையை உண்டாக்கிய உடன் பர்மாவில் வந்து அகப்பட்டுக் கொண்ட ஜப்பானியப் படைகளும், இந்திய தேசிய ராணுவ வீரர்களும் எந்த வகை கஷ்டத்துக்குள்ளாகி வாபஸ் வாங்க நேர்ந்த தென்பதை உணர்ந்தவர்களுக்கு உணவின் முக்கியத்தைப் பற்றி அதிகம் கூறத் தேவையில்லை. இச் சந்தர்ப்பத்தில் வேறு தலைவர்களாக இருந்தால் திருச்சி ஜில்லாவிலேயே படை கலைந்திருக்கும்; அல்லது வேறு திக்கை நோக்கி யிருக்கும்.

ராஜாஜி அச்சந்தர்ப்பத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுகளும் விடுத்த அறிக்கைகளும் கீதையைப் போல் பாராயணம் செய்யத் தக்கவை. அப் பொன் மொழிகள் தொண்டர்கள் உள்ளத்திலே புதிய உற்சாகத்தையும் பொது மக்களிடையே புதிய ஆர்வத்தையும் உண்டாக்கின. ஊருக்கு ஊர் தொண்டர்களை வரவேற்பதில் போட்டி ஏற்பட்டது. சோழ நாடு தன் பழம் பெருமையைப் பற்பல இடுக்கண்களிடையேயும் கலங்காது நிலை நாட்டியது.

157வது செக்ஷனுக்கு முதல் பலியானவர் காலஞ் சென்ற வள்ளல் ஸ்ரீ பந்துலுவையர் அவர்கள். மற்ற இடங்களிலெல்லாம் உணவு முதலிய ஏற்பாடுகளை ஆயிரக்கணக்கானவர்கள் சேர்ந்து ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் விஷயத்தில் இச் சட்டத்தின்படி யாரைக் கைது செய்வது எத்தனை பேரை எந்தச் சிறையி லடைப்பது என்பன போன்ற கேள்விகள் எழுந்து கலெக்டர் தாரன் உள்ளத்தில் திகைப்பை உண்டாக்கிற்று. ஆனால் வள்ளல் பந்துலு அய்யரோ எனின், அம்மாதிரி ஆயிரக் கணக்கானவர்கள் பேரால் இல்லாது தானே தொண்டர் படை அனைவரையும் தன் விருந்தினராக வரவேற்று உபசரித்தார்: உணவளித்தார். அதற்காகச் சிறைத் தண்டனை அடைந்தார்.

தொண்டர்படை திருத்துறைப்பூண்டியை அணுகியபோது ஒரு குறிப்பிடத் தகுந்த சம்பவம் நிகழ்ந்தது. பதினாயிரக் கணக்கான ஜனங்கள் திரளாகக் கூடியிருந்த பெருங்கூட்டத்தில் ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு தலைமையில் ராஜாஜி பேசிக் கொண்டிருக்கையில் போலீஸ் படை வந்து ஸ்ரீ ராமச்சந்திர நாயுடுவைச் சத்தியாக்கிரஹிகளுக்கு உணவு அளித்ததற்காகக் கைது செய்தனர். அதுவரை பொது வேலைகளில் வெளி வராத இளம் தேசபக்தர் ஸ்ரீ நாயுடுகாருவை அத்தகைய ஓர் பெரும் கூட்டத்தில் கைது செய்வதென்றால் எத்தகைய அறியாமை? கூட்டத்திலிருந்த அனைவரின் உள்ளத்திலும் ஆத்திரம் உச்ச நிலையை அடைந்தது. போலீசார் பேரிலும் அவர்கள் ஏறி யிருந்த லாரி பேரிலும் கல்மாரியும் மணல்மாரியும் பொழிய ஆரம்பித்தன. அந்தப் பிரமாண்டமான கூட்டத்தில் இருந்த ஜனங்கள் அவ்வளவு பேரும் எழுந்து ஒரே விநாடியில் பெரும் குழப்பமாகி நாயுடுகாருவை மீட்கும் வேலையில் ஈடுபடலாயினர். இந்த நிலையில் அரைகுறைத் தலைவர் யாராக இருந்த போதிலும் அத்துடன் தொண்டர் படைகள் கலைக்கப்பட்டு, தலைவர்கள் கைதியாக்கப்பட்டுப் பலர் உயிர் இழந்திருப்பர். ஆத்திரமடைந்த மாபெரும் கூட்டத்தினரின் மனோ தத்துவத்தை உணர்ந்த ராஜாஜி

பினும் அந்த நிலைமை வெகு சாதுர்யமாய் எத்தகைய அசம்பாவிதமும் இல்லாமல் சமாளிக்கப்பட்டது. வந்தேமாதர மந்திரத்தின் ஒரு பெரிய கோஷம் பெருங் குழப்பத்தினிடையே மின்னல் போன்ற வேகத்தில் ஒரு நிமிஷம் அமைதியை உண்டாக்கியது. அதன்மூலம் ராஜாஜியின் உபதேசத்தை ஜனங்கள் கேட்க முடிந்தது. அப்போது ராஜாஜி செய்த உபந்யாசம் சக்தி வாய்ந்த மந்திரம் போலிருந்தது. மோகனாஸ்திரம் போன்ற பயனைக் கூட்டத்தினரிடையே விளைவித்தது.

வேதாரண்யம் சத்தியாக்கிரஹமும் சம்பந்தமான இது போன்ற எண்ணிறந்த சம்பவங்கள் என் கண் எதிரே வந்து நிற்கின்றன. அவற்றை யெல்லாம் எழுதினால் ஒரு பெரும் புத்தகம் ஆகிவிடும்.

* * *

ராஜாஜி மாகாண அரசாங்கப் பொறுப்பை ஏற்ற பதினேழாம் நாள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தில் சேலம் ஜில்லாவில் மதுவிலக்குக் கொண்டு வரும் யோசனையைச் சமர்ப்பித்தார். அவ்வாறே மதுவிலக்குச் சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றினார். நம் நாட்டைக் காட்டிலும் சிறந்த கைத்தொழில் முன்னேற்ற மடைந்த மேல் நாடுகளிலும்கூட தொழிலாளர் வேலை நிறுத்தம் முதலாளிகள் கதவடைப்பு இவற்றைச் சமாளிக்க வகைதெரியாத காலத்தில், தடை யுத்தரவுகளைத் தொழிலாளருக்கே பொழிந்து வந்த நாட்டில், அந்த 144 தடை உத்தரவை முதலில் முதலாளிகளுக்கும் போட முடியுமென்பதை நிரூபித்துக் காட்டிய பெருமை ராஜாஜிக்கே உரியது.

மதுரை ஆலயப் பிரவேசத்தின்போது தலைவர் ஸ்ரீ வைத்தியநாதய்யர் அவர்கள் பேரில் வழக்கு நடக்கும் சமயம் நான் மதுரை சென்று வழக்கு விசாரணையைப் பார்க்க திருமலை நாயக்கர் மஹாலுக்குச் சென்றிருந்தேன். வழக்கு விசாரணையின் மத்தியில், கோர்ட்டார் இது விஷயத்தில் தலையிட முடியாமற் செய்த அவசரச் சட்டம் தந்தி மூலம் கோர்ட்டுக்கு வந்தது. அப்போது அங்கு கூடியிருந்த சாதாரண மக்களும், நூற்றுக்கணக்கான வக்கீல்களும் ஆதரிப்பவர் எதிர்ப்பவர் இரு சாராருமே ராஜாஜியின் புத்தி நுட்பத்தையும் மேதையையும் பாராட்டினர்.

* * *

இறுதியாக ஒரு விஷயம். இம்மாகாணத்தில் நம் ராஜாஜியின் சேவை நமக்கு வேண்டாமென்று சூழ்ச்சி செய்த கோஷ்டியாருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். இவர்களில்லை என்றால் நம் ராஜாஜியின் புகழும் மகத்தான சேவைகளும் நம் மாகாணத்துக் குள்ளேயே தானே அடங்கி நிற்கும்? ராஜாஜி எங்கிருந்தபோதிலும் புகழுடன் விளங்குவார் என்பது தெளிவாகி யிருக்கிறது. ஆறு ஏழு ஆண்டுகளுக்கு முன்னே தூரதிருஷ்டியுடன் அவர் சொன்னதைக் கேட்டிருந்தால் இன்று இத்தனை கொலைகளும் சூரபத்மன், ஹிரண்யன் இராவணன் காலத்திலெல்லாம் நடக்காத குரூரக் கொலை பாதகச் செயல்களும் நிகழாமல் செய்திருக்கலாமே என்று நாட்டின் உன்னதத் தலைவர்கள் முதல் பாமர மக்கள் வரை நாட்டின் வடகோடியிலிருந்து தென் கோடிவரை ராஜாஜியின் தீர்க்கதரிசனத்தைப் போற்றும் மொழிகளைக் கேட்கிறோம்.

ராஜாஜியைக் கவர்னர் ஜெனரலாக நியமனம் செய்த செய்தி வந்த அன்று நான் டெல்லிமா நகரிலிருந்தேன். டெல்லி பத்திரிகைகள் பெரும் கொட்டை எழுத்துக்களில் வெளியிட்ட சந்தோஷச் செய்தியைப் படித்தேன். இந்தியாவை ஒர் தமிழர் ஆளப் போகிறார் என்றும், அதன் விளைவாக இப்போது ஏற்பட்டிருக்கும் இன்னல்கள் நீங்கும் என்றும் அங்குள்ளவர்கள் எவ்வளவு ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறார்கள் என்பதை வர்ணிக்க இச் சிறு கட்டுரை இடம் தராது. இந்த நல்ல காரியங்களை எல்லாம் செய்து பூர்த்தி செய்யத் தக்க நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் எல்லாம் வல்ல இறைவன் நம் ராஜாஜிக்கு அருள் புரியுமாறு அனைவரும் பிரார்த்திப்போமாக.

## தலைசிறந்த அறிஞர்

பிரிட்டிஷ் பார்லிமெண்டு தொழிற் கோஷ்டியினருள் ஒருவராகிய ஆர்தர் பாட்டம்லி ராஜாஜியைப் பற்றிக் கூறியது:—

"ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் மிக்க நிர்வாகத் திறமை வாய்ந்தவராகவும், தலைசிறந்த அறிஞராகவும், உயரிய சிந்தனையாளராகவும் எனக்குத் தோன்றினார். அவரைப் போல இன்னும் சிலர் இருந்தால், இந்தியா எதற்காகவும் கவலைப்பட வேண்டியதில்லை."




# SHARK LIVER OIL

*and*

# Adamin

**HIGH POTENCY VITAMIN OIL**

பலத்தையும் சக்தியையும் நிலைநிறுத்த ஒவ்வொரு வித ஆட்டக்காரரும் ஏதோ ஒரு டானிக் சாப்பிடுவார். எவ்வித தேர்ச்சிபெற்ற ஆட்டக்காரருக்கும் தம் பலத்தை காப்பாற்ற போதிய 'A' & 'D' வைட்டமின்களை 'ஷார்க் லிவர்' ஆயிலும் அடமினும் அளிக்கின்றன.

எல்லா கெமிஸ்டு, டிரக்கிஸ்டுகளிடமும் கிடைக்கும்




**GOVERNMENT OIL FACTORY,**
**CALICUT.**

# அலை ஓசை

கல்கி



இருபத்து நாலாம் அத்தியாயம்

## நெஞ்சு விம்மியது!

மோட்டார் வண்டியின் சத்தம் கேட்டதும், சூரியா, "மதராஸ்காரர்கள் வந்து விட்டார்கள் போல் இருக்கிறது, அத்தை! ஐந்து மணிக்குத் தான் வருவதாக இருந்தது. நாலரைக்கே வந்து விட்டார்களே?" என்றான்.

"ஆமாம் அப்பா! வேளை நெருங்கி வரும்போது எல்லாம் சீக்கிரமாகவே நடந்து விடும். வேளை வரா விட்டால் ஒன்றும் நடவாது! வா, போகலாம்!" என்றாள் ராஜம்மாள்.

"நாம் அங்கே போய் என்ன செய்யப் போகிறோம்? அவர்கள் ஏதாவது செய்து கொள்ளட்டும். எனக்கு இது ஒன்றும் பிடிக்கவில்லை!" என்று சூரியா அலுத்துக் கொண்டான்.

"நன்றாயிருக்கிறது! குடும்பத்தில் இருபது வருஷத்துக்குப் பிறகு கலியாணம் நடக்கப் போகிறது. பெண்ணுக்குத் தமையன் நீ! எல்லாவற்றையும் நீயல்லவா நடத்தி வைக்க வேண்டும்? நான் இருந்து ஒன்றும் ஆகப்போவதில்லை யென்றாலும், சமயத்தில் இல்லாமற் போனால் யாராவது ஏதாவது நினைத்துக் கொள்வார்கள்! புறப்படு, போகலாம்!" என்றாள் ராஜம்.

போகும் வழியில் சூரியா, "அத்தை! பம்பாயிலிருந்து கடிதம் வந்ததே! ஏதாவது விசேஷம் உண்டா? அத்திம்பேர் தானே கடிதம் எழுதியிருக்கிறார்? அவர் இந்தப் பக்கம் இப்போது வரமாட்டாரா?" என்று கேட்டான்.

"விசேஷம் ஒன்றுமில்லை. வடக்கே பாட்னா என்று ஒரு பட்டணம் இருக்கிறதாமே? ஒரு வேளை உத்தியோக காரியமாக அங்கே போக வேண்டியிருக்கும் என்று எழுதியிருக்கிறார். திரும்பிப் போகும் போது இங்கே வந்தாலும் வருவாராம். அதற்குள்ளே சீதாவுக்கு ஒருவேளை கலியாணம் நிச்சயமாகி விட்டால்......"

"அத்தை! நீ கூடப் பட்டிக்காட்டு ஸ்திரீகளைப் போல் ஓயாமல் 'கலியாணம்' 'கலியாணம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறாயே? எதற்காக இவ்வளவு கவலை?"

"கவலைப்பட வேண்டிய காரியம், சூரியா! அதனால் தான் கவலைப்படுகிறேன்!" என்றாள் ராஜம்மாள்.

இருவரும் அக்கிரகாரத்தின் வீதியை அடைந்த போது மோட்டார் வண்டி சிமாச்சு வய்யரின் வீட்டு வாசலில் நிற்பதைக் கண்டார்கள்.

• • •

பட்டா வய்யரின் வீட்டில் லலிதாவினுடைய அலங்காரத்தின் கடைசிக் கட்டம் நடந்து கொண்டிருந்தது. சீதாவின் பரபரப்பைச் சொல்லி முடியாது. லலிதாவின் ஒரு கை வளையைக் கழற்றி இன்னொரு கையில் போடுவதும் ஒரு விரலில் உள்ள மோதிரத்தைக் கழற்றி இன்னொரு விரலில் போடுவதும் தலையில் வைத்திருந்த பூவை எடுத்து எடுத்துச் சரிப்படுத்தி வைப்பதும் முன் தலையையும் வகிடையும் சீப்பினால் இலேசாக

அப்படியும் இப்படியும் வாரி அமுக்கு பண்ணுவதும் நெற்றிப் பொட்டைப் பத்துத் தடவை மாற்றி மாற்றி வைப் பதுமா யிருந்தாள்.

சூரியாவைக் கண்டதும் சரஸ்வதி அம்மாள், "ஏண்டா! இத்தனை நேரம் எங்கேயடா போனாய்? அத்தையோடு அரட்டையடிப்பதற்கு இது தானா சமயம்? அவர்கள் சொன்ன 'டய'த் துக்கு அரைமணி முன்னதாகவே வந்து விட்டார்கள். டிபன் கொண்டு கொடுப்பதற்காக உன்னைப் பார்த் தால் ஆளைக் காணோம். சோமசு மாமாவோ 'நேரமாச்சு!' என்று குதிக்கிறார். கடைசியில் பரிசாரக னிடம் கொடுத்தனுப்பிச் சுண்டுவை யும் கூடப் போகச் சொன்னேன். இப்போது தான் போகிறார்கள். நீயும் போ! மாப்பிள்ளைக்கு நீயே கவனித்து டிபன், காப்பி எல்லாம் கொடு! ரவாகேஸரி செய்து அனுப்பி யிருக்கிறேன். போட மறந்து விடப் போகிறான். நீ போய்க் கவனித்துக் கொள்! போ! சீக்கிரம் போ!" என்று விரட்டி அடித்தாள்.

"நான் ஒன்றும் போகவில்லை. எத்தனை பேர் போக வேண்டுமாம்? இதற்குள்ளே இவ்வளவு தடபுடல் எதற்காகப் படுத்துகிறாய் என்று தெரியவில்லை!" என்றான் சூரியா.

"கேட்டாயல்லவா பிள்ளையின் சமர்த்தை? அப்பாவைப் போலத் தான் பிள்ளையும்! இவர்களையெல் லாம் வைத்துக் கொண்டு நான் எப்படித்தான் நாளைக்குக் கலியா ணம் பண்ணிச் சமாளிக்கப் போகி றேனோ தெரியவில்லை!"

இதற்குள் சீதா, "சூரியா! அம்மா சொன்னதைக் கேட்டால் என்ன? மாப்பிள்ளையை நீ போய்க் கவனியாமல் பின்னே யார் கவனிப் பார்கள்?" என்றாள்.

"எல்லாருமாகச் சேர்ந்து அதற்குள் 'மாப்பிள்ளை' என்று ஸ்திரப்படுத்தி விடுகிறீர்களே! இன்னும் அந்த மேதாவி வந்து லலிதாவைப் பார்த் தாகவில்லை!" என்றான் சூரியா.

"அதுதான் நானும் சொல்கிறேன்!" என்றாள் லலிதா.

"நீ பேசாமலிரு, லலிதா!" என்றாள் அவள் தாயார் சரஸ்வதி அம்மாள்.

"அத்தான்! நீ இப்படிப் பிடிவாதம் பிடிக்கிற பட்சத்தில் நான் போய் வந்தவர்களுக்கு டிபன் பரிமாறி விட்டு வருகிறேன்! நீ போகிறாயா, நான் போகட்டுமா? ஆண்பிள்ளையா, இலட்சணமா, ஜம்மென்று போக, 'மாப்பிள்ளை, வாரும்! வாருங்கோ!' என்று கையைப் பிடித்துக் குலுக்கி— அதை விட்டு இங்கே என்னத்தைச் செய்கிறாய்?" என்றாள் சீதா.

"அப்படிச் சொல், சீதா! இந்த வீட்டிலேயே நீ ஒருத்திதான் சமர்த்து. நீ மட்டும் இன்றைக்கு இல்லாவிட் டால் இந்தப் பெண்ணின் தலையை வாரிப் பின்னி விடுகிறதற்குள்ளே என்னை என்ன பாடுபடுத்தி யிருப் பாள், தெரியுமா? உனக்கும் ஒரு வரனைப் பார்த்துக் கலியாணம் நிச் சயம் பண்ணி விட்டால்தான் எனக்கு மனது நிம்மதியாகும்!"

"அதைப்பற்றி இப்போது என்ன பேச்சு, மாமி! இன்றைக்கு நடக்க வேண்டியதைப் பார்க்கலாம். உங்கள் பிள்ளை போகிற வழியாகக் காண வில்லையே?"

"எல்லாரும் இன்றைக்குப் புதிதாக வந்தவர்களைப் பற்றி இவ்வளவு கரி சனம் காட்டுகிறீர்களே தவிர வீட்டு மனுஷனை யார் கவனிக்கிறீர்கள்? எனக்குக் கூடத்தான் பசியா யிருக் கிறது. யாராவது என்னை 'டிபன் சாப்பிடு!' என்று சொல்கிறீர்களா? இந்த உலகமே இப்படித் தான்! மகா மோசம்!" என்று சொல்லிக் கொண்டு சூரியா வெளியேறினான்.

• • •

சோமசு வய்யரின் வீட்டுக்குச் சூரியா போய்ச் சேர்ந்தபோது மத ராஸிலிருந்து வந்தவர்கள் சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தார்கள். மாப் பிள்ளைப் பையன், அவனுடைய தகப்ப னார், தாயார், சுப்பய்யர் ஆக நாலு பேர் வந்திருந்தார்கள் என்பதைச் சூரியா கவனித்துக் கொண்டான். அவர்களோடு உட்கார்ந்து சுண்டுவும் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். சோமசு வய்யர் அவர்களையெல்லாம் உபசரிப்பதில் ஈடுபட்டிருந்தார்.

சூரியா தாழ்வாரத்தின் தூணைப் பிடித்துக் கொண்டு மௌனமாய் நின்றான். அவனைக் கவனித்த மாதி

ஸப்ரீ ஜட்ஜ் சாஸ்திரியார் "இந்தப் பையன் யார்?" என்று கேட்டார்.

"இவன்தான் பெண்ணின் தமையன் சூரியநாராயணன்; எஸ். எஸ். எல். ஸி. படிக்கிறான்!" என்றார் சிமாச்சுவய்யர்.

ஸௌந்தர ராகவன் எம். ஏ. தலை நிமிர்ந்து பார்த்துவிட்டு, "எஸ். எஸ். எல். ஸி. தாராளமாய்ப் படிக்கட்டும்; அதற்காக ஏன் இவ்வளவு கோபமாயிருக்க வேண்டும்!" என்றான்.

ஸௌந்தரராகவன் ஹாஸ்யமாகச் சொன்னதைச் சூரியா ரஸிக்கவில்லை. "எனக்கு என்ன கோபம்? நீங்கள் தான் வருகிற போதே கோபமாய் வந்திருப்பது போலத் தோன்றுகிறது. அதனால்தான் பரிமாற வருகிறதையெல்லாம் 'வேண்டாம்' 'வேண்டாம்' என்கிறீர்கள். கல்யாணம் ஆன பிறகல்லவா கோபதாபமெல்லாம் வைத்துக் கொள்ளவேண்டும்? இப்போது எதற்கு?" என்றான் சூரியா.

"பலே, அப்பா, பலே!" என்றார் ஸ்ரீ பத்மலோசன சாஸ்திரியார். "காமாட்சி! பார்த்தாயல்லவா பையனுடைய பேச்சை! இந்தக் காவேரித் தண்ணீரில் ஏதோ மகிமை இருக்கிறது என்று நான் சொன்னது இப்போதாவது உண்மையென்று உனக்குப்படுகிறதா?" என்றார்.

"இந்தக் காலத்திலேயே பிள்ளைக் குழந்தைகள் எல்லாரும் சமர்த்தாகத் தானிருக்கிறார்கள்!" என்றாள் காமாட்சி அம்மாள்.

"பெண் குழந்தைகள் மட்டும் இலேசா இருக்கிறார்களா, என்ன? இவன் தங்கையோடு நீங்கள் பேச்சுக் கொடுத்துப் பார்த்தால் தெரியும்! என்ன ஓய்! சுப்பய்யரே! நான் சொல்கிறது என்ன?" என்று சிமாச்சுவய்யர் இன்ஷூரன்ஸ் சுப்பய்யரைச் சாட்சிக் கூண்டுக்கு அழைத்தார்.

"எல்லாம் இன்னும் கால்மணியில் தெரிந்துவிடுகிறது!" என்று பட்டுக் கொள்ளாமல் சொன்னார் சுப்பய்யர்.

* * *

லலிதாவின் அலங்காரம் ஒருவிதமாக முடிவடைந்தது.

"சீதா! இனிமேலாவது நீ போய் முகத்தை அலம்பிப் பொட்டு வைத்துக்கொள்ளேன்!" என்றாள்.

"எனக்கென்னடி இப்போது வந்திருக்கிறது!............இதோ பார்! காதண்டை இந்தச் சுருட்டை மயிர் இப்படித் தொங்கினால் நன்றாயிருக்கும்!" என்று சீதா மறுபடியும் லலிதாவின் முகத்தை அழகு படுத்தத் தொடங்கினாள்.

"எல்லாம் இவ்வளவு போதும்! நீ போகிறாயா? மாட்டாயா? நீ மட்டும் முகம் அலம்பிப் பொட்டு வைத்துக்கொண்டு நல்ல புடவையும் கட்டிக் கொள்ளாவிட்டால் நான் காமரா உள்ளுக்குப் போய்க் கதவை இழுத்துத் தாள் போட்டுக் கொண்டு விடுவேன். யார் கதவை இடித்தாலும் திறக்க மாட்டேன். பெண் பார்க்க வந்தவர்கள் பார்க்காமலே திரும்பிப் போகவேண்டியதுதான்!"

"சீதா! அவள் சொல்லுகிறதைத் தான் கேளேன்! இவ்வளவு பிடிவாதம் எதற்கு? நீயும் தோழிப் பெண்ணாகப் பக்கத்தில் நிற்கவேண்டுமென்று லலிதா ஆசைப்படுகிறாள் போலிருக்கிறது. முகத்தில் எண்ணெய் வழியக் கந்தலைக் கட்டிக் கொண்டு நின்றால் சரியாயிருக்குமா?" என்றாள் சீதாவின் பெரியம்மா.

"ஆமாம், சீதா! உன் பெரியம்மா சொல்கிறதைக் கேள்!" என்றாள் சரசுவதி அம்மாள்.

"சரி! இப்படி எல்லாரும் சேர்ந்து சொன்னால் நான் என்ன செய்கிறது?" என்று சொல்லிக்கொண்டு சீதா தன்னுடைய அலங்காரத்தைக் கவனிக்கத் தொடங்கினாள்.

இந்தச் சமயத்தில் சரசுவதி அம்மாளின் தாயார் அவளைக் கூப்பிட்டுக் கொல்லைக் கட்டுக்குத் தனியாக அழைத்துக்கொண்டு போனாள். ஏதோ இரகசியமாகச் சொன்னாள். அதற்குச் சரசுவதி அம்மாள், "உனக்கு அலாதியாக ஏதேனும் தோன்றும்! பேசாமல் இரு! கிணற்றுத் தண்ணீரை வெள்ளம் கொண்டு போய்விடாது!" என்று பதில் சொன்னது எல்லாருடைய காதிலும் ஸ்பஷ்டமாக விழுந்தது.

* * *

சீதா தன் புடவையை மாற்றிக் கொண்டு முகம் கழுவிப் பொட்டு வைத்துக்கொண்டு வந்தாள்,

இல்லையோ, சரசுவதி அம்மாள் அவளைப் பார்த்து, "சீதா! சீதா! உன் மாமா வாசலிலேயே நிற்கிறார் பார்! அவரைக் கொஞ்சம் உள்ளே கூப்பிடு! அவர்கள் வருகிறபோது குழந்தை என்ன செய்ய வேண்டும் என்று ஒன்றும் சொல்லாமல் இவர் பாட்டுக்கு வாசலிலேயே நின்று கொண்டிருக்கிறாரே!" என்றாள்.

பெரியத்தை அபயாம்பாள் "அவள் சொல்லுகிறது என்ன? நமக்குத் தெரியாதா? அவர்கள் வந்து உட்கார்ந்ததும் குழந்தை கையில் வெற்றிலைப் பாக்குத் தட்டோடு வரவேண்டியது. தட்டை வைத்து விட்டு எல்லாருக்கும் சேர்த்து ஒரு நமஸ்காரம் செய்ய வேண்டியது. பிறகு கூடத்துக்கு வந்து நிற்க வேண்டியது. யாராவது ஏதாவது கேட்டால் கணீரென்று பதில் சொல்ல வேண்டியது!" என்று சொன்னாள்.

"எல்லாவற்றுக்கும் நீ மாமாவைக் கொஞ்சம் கூப்பிடு, சீதா!" என்றாள் சரசுவதி அம்மாள்.

சீதா வாசற்பக்கம் சென்று பார்த்தாள். மாமாவும் இன்னும் ஊரார் சிலரும் தெருவில் போட்டிருந்த கொட்டைப் பந்தலில் நின்று கொண்டிருந்தார்கள். மோட்டார் புறப்பட்டு வந்து கொண்டிருந்தது.

இந்தச் சமயத்தில் மாமாவைக் கூப்பிடலாமா, கூடாதா என்று யோசித்துக் கொண்டு சீதா வாசற்படி அருகில் சிறிது தயங்கி நின்றாள்.

இதற்குள் மோட்டார் வண்டி வந்து வீட்டு வாசலில் நின்றது. லலிதாவைப் பார்க்க வருகிற மாப்பிள்ளை எப்படியிருப்பான் என்று தெரிந்து கொள்ளச் சீதாவின் மனதில் எழுந்த ஆவல் அவளை அங்கே நிற்கும்படி செய்தது.

மோட்டாரிலிருந்து முதலில் ஒரு பெரியவர் இறங்கினார். அடுத்தாற்போல் ஒரு யௌவன புருஷன் இறங்கினான். அவன்தான் மாப்பிள்ளையாயிருக்க வேண்டும். அடடா! எவ்வளவு நன்றாயிருக்கிறான்! லலிதா அதிர்ஷ்டசாலிதான்; சந்தேகமில்லை.

சீதாவின் நெஞ்சு விம்மித் தொண்டையை வந்து அடைத்துக் கொண்டது. கண்களில் கண்ணீர் வரும்போலிருந்தது. தலை சுழன்றது. சட்டென்று சமாளித்துக் கொண்டாள். சமாளித்துக் கொண்டு பார்த்தபோது அந்த யௌவன புருஷன் தன்னை நோக்குவதைக் கண்டாள். "என்னைக் கலியாணப் பெண் என்று நினைத்துக் கொள்ளப் போகிறாரே!" என்ற எண்ணம் உண்டானதும் வெட்கம் பிடுங்கித் தின்றது. இரண்டே பாய்ச்சலில் உள்ளே ஓடி வந்து "அவர்கள் வந்தாச்சு!" என்றாள் சீதா. பிறகு லலிதாவின் அருகில் சென்று அவளைக் கட்டிக் கொண்டு காதோடு "அடியே! உனக்கு வந்திருக்கும் அகமுடையானைப் பார்த்து விட்டேன். ரொம்ப அழகாயிருக்கிறார். மாமா சொன்னபடி மன்மதன் தான்!" என்றாள்.

"சீ! போடி!" என்றாள் லலிதா.

## இருபத்து ஐந்தாம் அத்தியாயம்

# கண்கள் பேசின

வீட்டு ரேழியில் திடுதிடுவென்று மனிதர்கள் வரும் சத்தம் கேட்கவே பெண்கள் எல்லாரும் காமரா உள்ளுக்கும் சமையல் உள்ளுக்கும் விரைந்து போய் மறைந்து கொண்டார்கள்.

சற்றுப் பொறுத்துச் சரசுவதி அம்மாள் மட்டும் வெளியே வந்து, சம்பந்தி அம்மாளாகப் போகிற காமாட்சி அம்மாளை நெருங்கி "வாருங்கள்!" என்று அழைத்தாள்.

தயாராகப் போட்டிருந்த நாற்காலிகளில் வந்த புருஷர்கள் எல்லாரும் உட்கார்ந்தார்கள். சற்று நேரம்வரை மௌனம் குடி கொண்டிருந்தது.

"என்ன ஓய்! குழந்தையை வரச் சொல்லுகிறதுதானே!" என்றார் சீமாச்சுவய்யர்.

"நீர் தான் சொல்லுமே, ஓய்!" என்றார் கிட்டாவய்யர்.

சீமாச்சுவய்யர் சடசடவென்று காமரா உள் பக்கம் சென்று, "குழந்தையை வரச் சொல்லுங்கள். கையிலே வெற்றிலைப் பாக்குத் தட்டை எடுத்து வரச் சொல்லுங்கள்! ஐந்தரை மணி

முதல் ஆறு மணி வரையில் நல்ல வேளை. மணி ஐந்தே முக்கால் ஆகி விட்டது! சீக்கிரம் வரட்டும்!" என்று இரைந்தார்.

காமரா உள்ளில் ஏதோ வாதப் பிரதிவாதம் நடக்கதாகத் தோன்றியது. சிமோச்சு வய்யர் மறுபடியும், "அதனால் என்ன? சீதாவும் வரட்டுமே! நீங்களும் வாருங்களேன்! எல்லோரும் வரவேண்டியதுதான். மாப்பிள்ளையும் பெண்ணும் இன்னைக்கே இரகசியம் பேசப்போகிறார்களா? அதற்கெல்லாம் பிற்பாடு நாள் இருக்கிறது!" என்றார்.

இதனிடையில் லலிதாவும் சீதாவும் அறையிலிருந்து வெளிப்பட்டார்கள். லலிதா கையில் வெற்றிலைத் தட்டுடன் குனிந்த தலை நிமிராமல் நடந்தாள். சீதா அவளுடைய ஒரு கையைத் தன்னுடைய கையில் கோர்த்துக் கொண்டு ஓரளவு அவளைத் தள்ளிக்கொண்டு வந்ததாகத் தோன்றியது.

சீதா தலையைக் குனிந்து கொண்டு நடக்கவில்லை. வந்திருந்தவர்களைத் தைரியமாக ஏறெடுத்துப் பார்த்துக் கொண்டு வந்தாள். அந்தக் கண்ணோட்டத்தில் மாப்பிள்ளையின் முகத்தையும் பார்த்தாள். தான் எதிர்பார்த்ததுபோல் அவன் லலிதாவைப் பார்க்காமல் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்தது அவளுக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்கியது.

கனவிலே நடப்பதுபோல் நடந்து வந்த லலிதா, வந்திருந்தவர்கள் உட்கார்ந்திருந்த இடத்தை அடைந்ததும் அவர்கள் எதிரில் இருந்த முக்காலிப் பலகையில் வெற்றிலைத் தட்டை வைத்தாள். பிறகு நமஸ்காரம் செய்தாள்.

லலிதா நமஸ்கரித்தபோது மறுபடியும் மாப்பிள்ளை என்ன செய்கிறான் என்று சீதா பார்த்தாள். மாப்பிள்ளை லலிதாவைப் பார்ப்பதற்குப் பதிலாகத் தன்னைப் பார்ப்பதைக் கண்டாள். வெறுமனே பார்த்ததோடு இல்லை. புன்னகையும் புரிந்தான்! வானத்திலிருந்து நட்சத்திரங்கள் பொலபொலவென்று உதிர்ந்து உலகை ஜோதிமயமாக்கின! — சீதாவின் இதயமாகிய உலகத்தைத்தான்!

லலிதா நமஸ்கரித்துவிட்டு எழுந்தபோது அவளுக்கும் மாப்பிள்ளையைப் பார்க்க வேண்டுமென்ற அடங்காத ஆசை உண்டாயிற்று. மடங்கியிருந்த கண்ணிமைகளைச் சிரமப்பட்டுத் தூக்கிக்கொண்டு பார்த்தாள். அவளுடைய பார்வையில் பத்மலோசன சாஸ்திரி தட்டுப்பட்டார். "ஐயோ! இவரா!" என்ற பீதி ஒரு கணம் உண்டாயிற்று. "சீ! இவராயிராது இவர் மாப்பிள்ளையின் தகப்பனார் போலிருக்கிறது" என்று தெளிந்து பக்கத்தில் பார்வையைச் செலுத்தினாள். இந்தத் தடவை அவள் பார்த்தது சௌந்தரராகவனைத்தான். ஆனால் சௌந்தரராகவன் அச்சமயம் இதழ்களில் புன்னகையுடன் வேறு எங்கேயோ அவளுடைய தோளுக்கு மேலாகப் பார்த்துக் கொண்டிருந்தான். லலிதா மறுபடியும் முன்போல் தலையைக் குனிந்து கொண்டாள்.

"எந்தக் குழந்தையை இப்போது பார்ப்பதற்காக வந்திருக்கிறோம்? தலையிலே சடைவில்லையும் திருகுப்பூவும் வைத்துப் பின்னிக்கொண்டிருக்கிறாளே, அந்தக் குழந்தைதானே?" என்று பத்மலோசன சாஸ்திரி தமது கம்மலான கன சாரீரத்தில் கேட்டார். அது யமதர்ம ராஜனின் குரலைப் போல் லலிதாவின் காதில் விழுந்தது. அவன் பார்த்திருந்த சத்தியவான்—சாவித்ரி நாடகத்தில் யமதர்ம ராஜன் அத்தகைய குரலில்தான் பேசினான்!

சாஸ்திரியின் சம்சாரம் காமாட்சி அம்மாள் "அழகாய்த்தானிருக்கிறது, உங்கள் கேள்வி! பார்த்தால் எந்தப் பெண் என்று தெரியவில்லையா? நமஸ்காரம் செய்ததிலிருந்து கூடத் தெரியாமலா போச்சு!" என்றாள்.

"இல்லேடி! தெரியத்தான் தெரிகிறது! இருந்தாலும் சந்தேகத்துக்கு இடமிருக்கக் கூடாதே என்று கேட்டேன். இருக்கட்டும்; பெண்ணுக்கு எழுதப் படிக்கத் தெரியுமோ? எது வரை படித்திருக்கிறாள்?"

"நன்றாய்க் கேட்டேளே ஒரு கேள்வி? எழுதப் படிக்கத் தெரியுமாவா? அப்பாவின் பட்டாபணியம் வேலையில் பாதி அவள்தானே பார்க்கிறாள்? அவள் படிக்காத கதைப் புத்தகம், நாவல் பாக்கி இல்லை. இங்கிலீஷ் சக்கைப் போடாகப் பேசுவாள். நாளைக்கு மாப்பிள்ளை பேசிப் பார்த்தால் தெரிந்து போய் விடுகிறது!" என்றார் சிமோச்சு வய்யர்.



இதைக் கேட்ட சாக்ஷாத் மாப்பிள்ளை செளந்தரராகவன், "நாளைக்கு என்று ஏன் ஒத்திவைக்க வேண்டும்? இன்றைக்கே டேசிப் பார்த்துவிட்டால் போகிறது!" என்றான்.

"அப்படிப் போடுங்க ஒரு போடு, மாப்பிள்ளை! ஆனாலும் நாங்கள் எல்லாரும் பட்டிகாட்டு மனுஷாள் தானே? அவ்வளவு நாகரிகம் இன்னும் இங்கே யெல்லாம் பரவவில்லை. கலியாணம் ஆகி அழைத்துக் கொண்டு போனால் பத்து நாளில் எல்லா நாகரிகமும் பழகிக் கொள்கிறாள். என்ன ஓய்! கிட்டா வய்யரே! நான் சொல்கிறது என்ன?"

அப்போது சப் ஜட்ஜ் சாஸ்திரி "கிட்டா வய்யரைக் கேட்பானேன்? நானே சொல்கிறேன். எனக்கும் இந்த காலத்து நாகரிகம் அவ்வளவாகப் பிடிக்காது. என் சம்சாரம் என்னை விடக் கர்நாடகம். மாட்டுப் பெண் இங்கிலீஷ் படித்துப் பாஸ் பண்ணி உத்தியோகப் பார்க்க வேண்டுமென்று நாங்கள் ஆசைப்படவில்லை. இருந்தாலும் பிள்ளையாண்டான் இந்தக் காலத்துப் பையன் பாருங்கோ! படித்த பெண்ணா யிருக்க வேண்டுமென்று ஆசைப்படுவது இயல்புதானே! போகட்டும். குழந்தைக்குப் பாடத் தெரியுமா? சிட்சை கிட்சை உண்டா?" என்றார்.

"என்ன ஓய், கிட்டா வய்யரே! பதில் சொல்லுமே ஓய்! எல்லாவற்றுக்கும் நான்தானா பதில் சொல்ல வேண்டும்?"

கிட்டா வய்யர் உடனே, "குழந்தைக்குச் சங்கீத சிட்சை யில்லை. கிரா



மாக்தரத்தில் அதற்கு வசதி கிடையாது. ஆனால் நன்றாகப் பாடுவாள். நானே சொல்லிக் கொடுத்திருக்கிறேன். எனக்குக் கொஞ்சம் சங்கீத ஞானம் உண்டு!" என்றார்.

"ஓகோகோ! அப்படி வாருங்காணும் வெளியிலே! நீரே சொல்லிக் கொடுத்திருக்கிறீரா? தீக்ஷிதர் கிருதி ஏதாவது தெரியுமா?"

"பேஷாகத் தெரியும்!...லலிதா! 'மாமவ பட்டாபிராமா' பாடு!"

இத்தனை நேரமும் லலிதா தலை குனிந்தபடியே இருந்தாள். இப்போது அப்பாவின் குரல் வந்த திசையை நோக்கி இரக்கம் ததும்பிய முகத்துடன் பார்த்து விட்டு மறுபடியும் தலையைக் குனிந்து கொண்டாள்.

"தீக்ஷிதர் கிருதி தெரியாவிட்டால் வேண்டாம். சியாமா சாஸ்திரி கிருதி தெரிந்தால் பாடட்டும்."

"ஆகா! சியாமா சாஸ்திரி கிருதியும் குழந்தைக்குத் தெரியும். 'ஸரோஜ தளநேத்ரி' பாடு, அம்மா!"

லலிதா அதற்கும் மௌனமாகவே இருந்தாள்.

"இல்லை, பட்டணம் சுப்பிரமணிய அய்யர் கீர்த்தனம், தியாகராஜ கீர்த்தனம் எது தெரிந்தாலும் பாடட்டும்."

"அதுதானே சரி! தீக்ஷிதர் கிருதி என்றால் அது சேலம் ஜில்லா தாம்புக் கயிறு மாதிரி நீண்டு கொண்டே இருக்கும். உனக்குச் 'சங்கல்பமே டேதோ மனஸா' தெரியுமே, அதைப் பாடு! இல்லாவிட்டால் 'மருகேலரா' பாடு!" என்றார் சீமாச்சு வய்யர்.

"இல்லாவிட்டால் தியாகராஜ கிருதியில் பல்லவியும் தீக்ஷிதர் கிருதியில் அநுபல்லவியும் சியாமா சாஸ்திரி கிருதியில் சரணமும் பாடட்டுமே!" என்றான் சௌந்தரராகவன்.

புருஷர்களை கோஷ்டியில் சிறு சிரிப்பின் சத்தம் உண்டாயிற்று. ஸ்திரீகளிடையிலே கசு முசு என்ற பேச்சின் ஓசை ஏற்பட்டது. சூரியாவின் கண்களில் தீப்பொறி பறந்தது.

ஒன்றுக்கும் லலிதா மசிகிற வழியாக இல்லை. சீதா இரகசியம் பேசுகிற குரலில், "ஏண்டி இப்படிப் பேசாமல் இருக்கிறாய்! ஒரு பாட்டுப் பாடடி!" என்று தூண்டினாள்.

அப்படித் தூண்டியும் பயனில்லாமற் போகவே மாப்பிள்ளைப் பையனைப் பார்த்தாள். அவனும் அதே சமயத்தில் அவளைப் பார்த்தான். அவர்களுடைய மனதில் இருந்ததைப் பரஸ்பரம் அவர்களுடைய கண்களின் பேச்சினால் தெரிந்து கொண்டார்கள். "இந்தப் பட்டிக் காட்டுச் சங்கோசப் பிராணியைக் கலியாணம் செய்து கொண்டு நான் என்னத்தைச் செய்வது?" என்று சௌந்தர ராகவனின் கண்கள் கூறின. பதிலுக்கு, "ஆமாம்; உங்களுடைய நிலைமை கஷ்டமானதுதான். என்னுடைய மனப்பூர்வமான அநுதாபம்" என்று சீதாவின் கண்கள் தெரியப் படுத்தின.

"சீதா! நீயும் லலிதாவோடு சேர்ந்து ஒரு பாட்டுப் பாடேன்! குழந்தை தனியாகப் பாடக் கூச்சப்படுகிறாள்!" என்றார் சுப்பய்யர்.

"ஆமாம்; சீதா! நீயும் சேர்ந்து பாடு!" என்று சரசுவதி அம்மாள் பக்கத்தில் வந்து நின்று பகிரங்க இரகசியமாகக் கூறினாள்.

சீதா பளிச்சென்று "எங்கள் இரண்டு பேருக்கும் தெரிந்த பாட்டு ஒன்றும் இல்லையே!" என்றாள்.

"அப்படியானால் நீயேதான் ஒன்று பாடேன். அவள் தைரியப் படுத்திக் கொண்டு அப்புறம் பாடட்டும்!" என்றார் பத்மலோசன சாஸ்திரிகள்.

"யோசித்துப் பார்க்கிறேன். ஏன், லலிதா! 'நகுமோமு கனலேனி' உனக்குத் தெரியுமல்லவா? இரண்டு பேரும் சேர்ந்து பாடுவோம்! என்ன? பேசாமலிருந்து விடாதே!" என்று சொல்லி விட்டுச் சீதா கணீரென்ற குரலில் பாட ஆரம்பித்தாள். லலிதா பல்லவியில் பாதியில் சேர்ந்து கொண்டாள். ஆனால் அவளுடைய குரல் எடுபடவில்லை. சீதாவின் குரல்தான் மேலோங்கி நின்றது. சீதா அநுபல்லவியை எடுத்து மேலே ஜம்மென்று போனபோது லலிதாவும் கூடப் பாட முயன்றாள். ஆனால் குரல் 'கிறீச்' என்று அபஸ்வரமாகக் கேட்டது. சட்டென்று நிறுத்திவிட்டுச் சீதாவின் கையை உதறி விடுவித்துக்கொண்டு விடுவிடு என்று காமரா உள்ளை நோக்கிச் சென்றாள் லலிதா.

எல்லாருக்கும் ஒரு மாதிரி ஆகி விட்டது. கிட்டா வய்யர் கோபக் குரலில் "இது என்ன லலிதா?" என்று அதட்டினார்.

சரசுவதி அம்மாள் லலிதாவின் கையைப் பிடித்து நிறுத்தி, "அசட்டுப் பெண்ணே! தினம் கச்சேரி செய்வதுபோல் மூன்று மணி நேரம் பாடுவாயே? இன்றைக்கு என்ன வந்தது?" என்றாள்.

லலிதா தாயாரின் கைகளையும் உதறிவிட்டு உள்ளே சென்றாள்.

சீதா, பாவம், ஒரு நிமிஷம் இன்னது செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டு நின்றாள். பிறகு மாப்பிள்ளைப் பையனை ஒரு தடவை கண்ணைச் சுழற்றிப் பார்த்து விட்டுத் தானும் உள்ளே போனாள்.

எழுந்திருந்த கிட்டா வய்யரைப் பத்மலோசன சாஸ்திரிகள் உட்காரச் செய்தார். "பரவாயில்லை; குழந்தையைத் தொந்தரவு படுத்த வேண்டாம். குரல் கேட்டுவிட்டது. வெகு இனிமையாயிருக்கிறது. போதும். இன்னொரு நாள் சாவகாசமாகக் கேட்டுக் கொள்ளலாம்!" என்றார்.

"பெண் ஊமையில்லை என்று தெரிந்து விட்டதல்லவா? அதுவே போதுமானது!" என்று 'கிருதக்'க்காகச் சொன்னான் சௌந்தரராகவன்.

"அப்படியெல்லாம் சொல்லாதே, அப்பா!" என்று காமாட்சி அம்மாள் கண்டித்து விட்டு எழுந்து உள்ளே போனாள். பெண் பிள்ளைகளும் ஆண் பிள்ளைகளும் தனித் தனியே சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு சம்பந்திகள் தங்கள் ஜாகைக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி



## 33. கல்கத்தா காங்கிரஸ்

தென்னாப்பிரிக்காவிலிருந்து இரண்டாவது முறை காந்திஜி கல்கத்தாவுக்குத் திரும்பிய 1901-ம் ஆண்டில் இந்திய காங்கிரஸ் மகாசபை கல்கத்தாவில் நடைபெற்றது. ஸர் பிரோஸிஷா மேத்தாவின் தலைமைச் சீடரான ஸ்ரீ டின்ஷா வாச்சாவின் தலைமையில் நடந்தது. காந்திஜி இந்தக் காங்கிரஸுக்குப் போகத் தீர்மானித்திருந்தார். காங்கிரஸில் தென்னாப்பிரிக்கா இந்தியர்களைப் பற்றிய தீர்மானம் கொண்டு வரவும் எண்ணியிருந்தார்.

ஸர் பிரோஸிஷா மேத்தா, ஸ்ரீ டின்ஷா வாச்சா, ஸ்ரீ சிமன்லால் சேதல்வட் ஆகியவர்கள் கல்கத்தா காங்கிரஸுக்குப் பிரயாணம் செய்த அதே ரயிலில் காந்திஜியும் ஏறிக் கொண்டார். ஸர் பி. மேத்தா முதலியவர்கள் விசேஷ வசதிகள் அமைந்த தனி வண்டியில் பிரயாணம் செய்தார்கள். குறிப்பிட்ட இரண்டு ரயில்வே ஸ்டேஷன்களுக்கிடையில் காந்திஜி மேற்படி தனி வண்டிக்கு வந்து ஏறிக்கொண்டு அவர் சொல்ல விரும்பிய விஷயங்களைச் சொல்ல வேண்டுமென்று ஏற்பாடாகியிருந்தது.

அதன்படியே குறிப்பிட்ட ரயில் நிலையத்தில் காந்திஜி ஸர் பிரோஸிஷாவின் தனி வண்டிக்கு வந்தார். அச்சமயம் மேத்தா, வாச்சா முதலியவர்கள் இந்தியாவின் அரசியல் நிலைமை பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். காந்திஜியைப் பார்த்ததும் மேத்தா, "காந்தி! உமக்கு நாங்கள் எந்த உதவியும் செய்ய முடியாது. நீர் விரும்புகிறபடி ஒரு தீர்மானத்தை வேண்டுமானால் காங்கிரஸில் நிறைவேற்றி வைக்கிறோம். ஆனால் என்ன உபயோகம்? நம்முடைய சொந்த நாட்டிலேயே நமக்கு அதிகாரமும் இல்லை; உரிமையும் இல்லை. ஐரோப்பியர் குடியேறிய இன்னொரு நாட்டில் இதைவிட நல்ல நிலைமையில் இந்தியர் எப்படி இருக்க முடியும்?" என்றார்.

பிரோஸிஷாவின் அபிப்பிராயத்தைச் சேதல்வட் ஆமோதித்தார். ஸ்ரீ டின்ஷா வாச்சாவோ, "அடடா! நான் என்ன செய்யட்டும்?" என்ற தோரணையில் காந்திஜியைப் பரிதாபமாகப் பார்த்தார். அவர்களிடம் தம் கட்சியை எடுத்துச் சொல்லி வாதிடலாம் என்று காந்திஜி உத்தேசித்தார். ஆனால் அது பலிக்கவில்லை. பம்பாயின் முடிசூடா மன்னரை ஒருவர் வாதிட்டுத் திருப்பி விடுவது முடிகிற காரியமா? காந்திஜியை அதிகமாகப் பேசுவதற்கே அவர்கள் விடவில்லை. தென்னாப்பிரிக்கா பற்றிய தீர்மானம் கொண்டுவருவது அனுமதிக்கிறார்களே என்ற திருப்தியுடன் காந்திஜி அந்த வண்டியிலிருந்து இறங்கித் தம் இடத்துக்குச் சென்றார்.

வண்டி கல்கத்தாவை அடைந்தது. கல்கத்தா காங்கிரஸின் வரவேற்புக் கழகத்தார் காங்கிரஸ் அக்கிராசனரை மிகச் சிறப்பாக அழைத்துச் சென்றார்கள். காந்திஜி தாம் எங்கே போவது என்று ஒரு தொண்டரைக் கேட்டார். பிரதிநிதிகள் பலர் தங்கியிருந்த ரிப்பன் கலாசாலைக் கட்டடத்துக்குக் காந்திஜியை அத்தொண்டர் அழைத்துச் சென்றார். லோகமான்ய திலகரின் ஜாகை அந்தக் கட்டடத்திலே தான் என்று அறிந்ததும் காந்திஜிக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று.

இந்தியாவின் தேசியத் தலைவர்களில் கோகலேக்கு அடுத்தபடியாகத் திலகரிடம் காந்திஜி பெருமதிப்புக் கொண்டிருந்தார். லோகமான்யருடைய ஜாகை ஒரு தர்பார் மண்டபத்தைப் போல் விளங்கியது. நண்பர்களும் சீடர்களும் புடைசூழத் திலகர் பெருமான் ஒரு சக்கரவர்த்தியைப்போல் தம் படுக்கையில் வீற்றிருந்த காட்சி காந்திஜியின் உள்ளத்தில் பதிந்தது. "நான் மட்டும் ஓவியக்காரனாயிருந்தால் அந்தக் காட்சியைப் படமாக எழுதியிருப்பேன்" என்று காந்திஜி தம் சுயசரிதத்தில் எழுதியுள்ளார்.

லோகமான்யரைப் பார்க்க வந்தவர்களில் ஒருவர் "அமிருதபஜார் பத்திரிகை"யின் பிரசித்த பத்திராசிரியரான பாபு மோதி

லால் கோஷ். இவ்விருவரும் அதிகார வர்க்கத்தின் தவறுகளைப் பற்றிப் பேசி 'ஓஹோ' என்று சத்தம் போட்டுச் சிரித்தார்கள். ஸ்ரீ மோதிலால் கோஷ் நகைச் சுவைக்குப் பெயர் போன ஆசிரியர் அல்லவா?

இம்மாதிரி தேசபக்தர்களைப் பார்ப்பதும் அவர்கள் அளவளாவிப் பேசுவதைக் கேட்பதும் காந்திஜிக்கு மகிழ்ச்சி தந்தது. ஆனால் காங்கிரஸ் சம்பந்தமான வேறு சில அம்சங்கள் ஏமாற்றத்தையும் மன வேதனையையும் அளித்தன.

காங்கிரஸ் பிரதிநிதிகள் தங்கியிருந்த விடுதி மிக மோசமான நிலையில் இருந்தது. சுகாதார ஏற்பாடுகள் கொஞ்சமும் செய்யப் படவில்லை. நாலாபுறமும் குப்பைகள். எங்கே பார்த்தாலும் குட்டை குட்டையாகத் தண்ணீர் தேங்கி நின்றது. கக்கூசுகள் மிகக் கொஞ்சம். அவற்றின் துர்நாற்றமோ சகிக்க முடியாதது. காங்கிரஸ் விடுதியில் ஊழியம் செய்வதற்காக அமர்த்தப் பட்டிருந்த தொண்டர்களுக்குத் தொண்டு என்பதே தெரியாது. ஒரு தொண்டரிடம் ஏதேனும் சொன்னால் அதை அவர் இன்னொருவரிடம் சொல்வார். அவர் மூன்றாவது தொண்டரிடம் சொல்வார். காரியம் ஒன்றும் நடைபெறாது. போதாததற்குத் தொண்டர்கள் அடிக்கடி தங்களுக்குள் சச்சரவு இட்டுக் கொண்டிருந்தார்கள். எனவே பிரதிநிதிகள் திக்குத் திசை தெரியாமல் என்ன செய்வது என்று அறியாமல் விழித்தார்கள்.

தமிழ்நாட்டிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் தங்களுக்கென்று தனிச் சமையலறை ஏற்படுத்திக் கொண்டு அதை நாலா புறமும் மூடி அமைத்திருந்ததையும் காந்திஜி கவனித்தார். தமிழ்நாட்டுப் பிரதிநிதிகள் தாங்கள் சாப்பிடுவதைப் பிறர் பார்த்தாலும் திருஷ்டி தோஷம் ஏற்படும் என்று நம்பிக்கை கொண்டிருந்தார்கள். இதனால் சமையல், சாப்பாடு, கையலம்புதல் எல்லாம் ஓர் அறைக்குள்ளேயே நடந்தன. அந்த அறைக்குள் செல்வோர் திக்குமுக்காடிப் போகும்படி சதா காலமும் புகை சூழ்ந்திருந்தது. தமிழ்நாட்டுப் பிரதிநிதிகளின் இந்தப் போலி வர்ணாசிரமம் காந்திஜியின் உள்ளத்தை வருத்தியது. "ராம் ராம்! காங்கிரஸ் பிரதிநிதிகளாக வரும் தேச பக்தர்களுக்குள்ளேயே இப்படித் தீண்டாமை குடி கொண்டிருந்தால் மற்ற ஜனங்களிடையே எப்படி இராது!" என்று காந்திஜி சொல்லி வருத்தப் பட்டார்.

காங்கிரஸ் விடுதியைச் சுத்தம் செய்யும் விஷயமாகத் தொண்டர்களுடன் பேசிப் பார்த்தார். அவர்களுக்குச் சிரத்தை ஏற்படவில்லை. "இந்தக் குப்பைகளைத் தள்ள வேண்டாமா?" என்றார் காந்திஜி. "அதெல்லாம் தோட்டிகளின் வேலை!" என்றார்கள் தொண்டர்கள். உண்மைத் தொண்டு செய்யும் முறையை அவர்களுக்குக் காந்திஜி தாமே செய்து காட்டிக் கற்பிக்க விரும்பினார். ஒரு தொண்டரிடம் விளக்குமாறு வேண்டும் என்று கேட்டார். அவர் ஆச்சரியத்துடன் திகைத்துக் காந்திஜியை உற்று நோக்கினார். ஆனால் விளக்குமாறு கொண்டுவரவில்லை. கடைசியாக ஒரு விளக்குமாறு சம்பாதித்துக் காந்திஜி தாமே கூட்டிக் காட்டினார். ஆனால் அவரைப் பின்பற்ற யாரும் முன் வரவில்லை. இந்த நிலைமையைக் குறித்துக் காந்திஜி எழுதியிருப்பதாவது:—

"பிரதிநிதிகளில் சிலர் தங்கள் அறைகளின் வெளிப்புறத்துத் தாழ்வாரத்தை



கல்கத்தா கவர்னர் ஆன மறுநாள் உதயத்தில் கவர்னர் மாளிகை வாசலில் ஒரு லட்சம் மக்கள் கூடி ஆரவாரம் செய்தார்கள். கவர்னர் மேல்மாடி முகப்பில் பிரசன்னமானதும் "ராஜாஜிக்கு ஜே!" என்ற கோஷம் எழுந்தது.

இரவு நேரத்தில் அசுத்தம் செய்யவும் பின்வாங்கவில்லை. காலையில் தொண்டர்களிடம் இத்தகைய அசுத்தமான இடங்களைக் காட்டினேன். அவ்விடங்களைச் சுத்தம் செய்ய எவரும் முன்வரவில்லை. அக் கௌரவத்தை என்னுடன் பங்கிட்டுக் கொள்ள ஒருவரும் தயாராயில்லையெனக் கண்டேன். இப்போது நிலைமை பெரிதும் அபிவிருத்தி யடைந்திருக்கிறது. ஆனால் இன்றுகூட காங்கிரஸ் விடுதியில் கண்டவிடமெல்லாம் அசுத்தமாக்கும் பிரதிநிதிகள் இல்லாமற் போகவில்லை. அவ்வாறே அந்த இடங்களைச் சுத்தப்படுத்துவதற்கு எல்லாத் தொண்டர்களும் எப்போதும் தயாராக முன் வருவதில்லை.........



கல்கத்தாவின் பிரசித்தி பெற்ற காளி கோவிலில் பக்தர்களின் சத்சங்கம்

"காங்கிரஸ் மகாசபை இன்னும் சில தினங்கள் நீடித்து நடக்குமானால், கொள்ளை நோய் பரவுவதற்குப் பெரிதும் அநுகூலமான நிலைமை ஏற்படும் என்பதைக் கண்டேன்."

காந்திஜி கல்கத்தா சேர்ந்து இரண்டு தினங்களுக்குப் பிறகுதான் காங்கிரஸ் மகாசபை கூடுவதாயிருந்தது. அந்த இரண்டு நாளும் காங்கிரஸ் காரியாலய வேலை ஏதேனும் செய்யலாம் என்று காந்திஜி கருதினார். பாபு பூபேந்திரநாத் போஸும் ஸ்ரீ கோஷால் என்பவரும் அச்சமயம் காங்கிரஸ் மகாசபையின் காரியதரிசிகள். காந்திஜி முதலில் பூபேந்திரநாத் போஸைப் பார்த்தார். அவர் கோஷாலிடம் போகும்படி சொன்னார். கோஷால் காந்திஜியைப் பார்த்துப் புன்னகையுடன், "உமக்கு என்ன வேலை கொடுக்கட்டும்? குமாஸ்தா வேலைதான் கொடுக்கலாம். செய்வீரா?" என்றார். 'பேஷாகச் செய்கிறேன்" என்றார் காந்திஜி. கோஷாலுக்கு இது மிகுந்த வியப்பை யளித்தது. சுற்றி நின்ற தொண்டர்களைப் பார்த்து, 'இவர் சொல்வது உங்கள் செவியில் விழுந்ததா? தொண்டு என்றால் எந்த வேலைக்கும் தயாராயிருக்க வேண்டும். இதுதான் சரியான மனப்பாங்கு" என்றார். பிறகு காந்திஜியைப் பார்த்து, "அதோ ஒரு கட்டுக் கடிதங்கள் கிடக்கின்றன. அவற்றைப் பிரித்துப் பாருங்கள். பெரும்பாலும் உபயோகமற்ற விஷயங்களாக இருக்கும். 'முக்கியமான விஷயம்; பதில் எழுதவேண்டும்' என்று தோன்றுகிற கடிதங்களை மட்டும் என்னிடம் கொடுங்கள்!" என்றார்.

கொடுத்த வேலையைக் காந்திஜி திருப்திகரமாகச் செய்து முடித்தார். அதற்குள் காந்திஜியைப் பற்றி விசாரித்து ஸ்ரீ கோஷால் தெரிந்துகொண்டார். 'அடடா! உங்களுக்குக் குமாஸ்தா வேலை கொடுத்தேனே!" என்று வருத்தப் பட்டார். காந்திஜி "அதைப்பற்றிக் கவலை வேண்டாம். காங்கிரஸ் தொண்டு எதுவானால் என்ன? இந்த மாதிரி சில்லறை வேலைகளில் தான் எனக்கு அநுபவம் வேண்டும்!" என்றார்.

கோஷாலும் காந்திஜியும் நெருக்க நண்பர்களானார்கள். அதனால் காங்கிரஸ் நடைமுறைகளையும் காங்கிரஸ் தலைவர்களின் ஆலோசனைகளையும் அருகிலிருந்து கவனிக்கக் காந்திஜிக்குச் சந்தர்ப்பம் கிட்டியது.

• • •

காங்கிரஸ் மகாசபை கூடியது. விஸ்தாரமான பந்தலும் அணிவகுத்து நின்ற தொண்டர் படையும் மேடைமீது அமர்ந்திருந்த தலைவர் குழாமும் காந்திஜியைப் பிரமிப்படையச் செய்தன. இந்தியாவில் அப்போது புகழ்பெற்றிருந்த தேசியத் தலை



" இங்கு ஏதோ விடு காலியா யிருக்கிறதாமே? வாஸ்தவமா?"

வர்கள் எல்லாரும் மேடைமீது பிரசன்னமாகி யிருந்தார்கள். அந்தப் பெரிய மகா சபையில் நாம் எம்மாத்திரம் என்ற உணர்ச்சியுடன் ஒரு மூலையில் காந்திஜி அடக்கமாக உட்கார்ந்திருந்தார்.

அந்த நாளில் காங்கிரஸ் அக்கிராசனரின் பிரசங்கம் ஒரு தனிப் புத்தகத்தைப்போல் அவ்வளவு நீளமா யிருக்கும். பிரசங்கம் முழுவதையும் படிப்பது இயலாத காரியம். சில பகுதிகளை மட்டுமே படிப்பார்கள்.

அக்கிராசனப் பிரசங்கம் முடிந்த பிறகு விஷயாலோசனைக் கமிட்டியின் கூட்டம் நடந்தது. அதற்குக் காந்திஜியை கோகலே அழைத்துச் சென்றார். பல தீர்மானங்கள் பிரேரணைக்கு வந்தன. ஒவ்வொன்றையும் ஆதரிக்க ஒரு பெரிய தலைவர் இருந்தார். பேரிகை முழக்கம்போன்ற குரலில் ஆங்கில பாஷையில் பிரசங்கங்கள் செய்தனர். நேரமாக ஆக, காந்திஜிக்குத் தம்முடைய தீர்மானத்தைப் பற்றிக் கவலை அதிகமாயிற்று. கடைசியில் வந்த தீர்மானங்கள் மின்னல் வேகத்தில் நிறைவேற்றப் பட்டன. இரவு பதினொரு மணி ஆயிற்று; எல்லாருக்கும் எழுந்து போக அவசரம். காந்திஜிக்கோ அந்தப் பெரிய மகான்களுக்கு முன்னால் பேசத் தயக்கம். கோகலேயின் அருகில் சென்று, "என்னுடைய தீர்மானத்தின் கதி என்ன? கொஞ்சம் கவனித்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னார்.

இந்தச் சமயத்தில் ஸர் பிரோஸிஷா மேத்தா, "எல்லாம் முடிந்து விட்டதல்லவா? கூட்டத்தை முடித்து விடலாமா?" என்று கேட்டார்.

"இல்லை, இல்லை. தென்னாப்பிரிக்கா தீர்மானம் பாக்கியிருக்கிறது. காந்தி வெகு நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிறார்!" என்று சத்தம் போட்டுக் கூறினார் கோகலே.

"தீர்மானத்தை நாங்கள் பார்த்து விட்டோமல்லவா?"

"ஓ! பார்த்தேன்."

"தீர்மானம் எப்படி யிருக்கிறது?"

"ரொம்ப நன்றாயிருக்கிறது."

"அப்படியானால் சரி! எங்கே, காந்தி! தீர்மானத்தைப் படியுங்கள், கேட்கலாம்!"

காந்திஜி நடுங்கிக் கொண்டே கனஸ்வரத்தில் தீர்மானத்தைப் படித்தார். படித்து முடித்ததும், "தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது" என்று பலர் கூவினார்கள்.

"காந்தி! இதைக் காங்கிரஸில் பிரேரணை செய்து பேசுவதற்கு உமக்கு ஐந்து நிமிஷம் தரப்படும்" என்றார் அக்கிராசனாதிபதி வாச்சா.

இந்த அவசரக் காரியம் காந்திஜிக்குப் பிடிக்கவில்லை. "தீர்மானம் இன்னதென்பதையே ஒருவரும் தெரிந்துகொள்ளவில்லையே!" என்று வருத்தப் பட்டார்.

காங்கிரஸில் மேற்படி தீர்மானத்தைப் பிரேரணை செய்து பேச வேண்டியது பற்றியும் கவலைப்பட்டார். ஐந்து நிமிஷத்திற்குள் என்னத்தைச் சொல்வது என்றே தெரியவில்லை. விஷயமோ மிகச் சிக்கலானது. மற்ற தீர்மானங்களைப் பற்றிப் பேசியவர்களில் சிலர் முக்கால் மணியும் அரைமணியும் கூடப் பேசினார்கள். ஆனால் காந்தி எழுந்து பேசத் தொடங்கி மூன்று நிமிஷத்திற்கெல்லாம் அக்கிராசனர் வாச்சா மணி அடித்து விட்டார். மணிச் சத்தம் கேட்டவுடனே காந்திஜியும் உட்கார்ந்து விட்டார். ஆனால் தீர்மானம் என்னமோ மற்ற எல்லாத் தீர்மானங்களையும் போல் ஏகமனதாக நிறைவேறி விட்டது. காங்கிரஸினால் தீர்மானம் நிறைவேற்றப் பட்டதென்பதே காந்திஜிக்கு அளவில்லாத திருப்தியும் மகிழ்ச்சியும் அளித்தது. காங்கிரஸ் ஒப்புக் கொண்டது என்றால், இந்தியா தேசமே ஒப்புக் கொண்டதாகும் அல்லவா?

கல்கத்தா கவர்னர் மாளிகைக்கு விஜயம் செய்த பல பிரபல விருந்தினரில் வங்காளத்தின் பழைய கவர்னர் கேஸி ஒருவர்.

•

ஐக்ய மாகாணத்தின் கவர்னரிணி ஸ்ரீமதி சரோஜினி இன்னொருவர்

# உலகம் பாராட்டுகிறது!

[சென்ற மாதம் ராஜாஜி கவர்னர் ஜெனரலாக நியமிக்கப் பட்ட செய்தி வெளியானதும், இந்தியாவிலும் உலகெங்குமுள்ள பல பிரமுகர்களும் பத்திரிகைகளும் அதை மனப்பூர்வமாக வரவேற்று ராஜாஜிக்கு நல் வாழ்த்துக்கள் கூறி மகிழ்ந்தார்கள். அந்த வாழ்த்துச் செய்திகளில் சிலவற்றைக் கீழே காண்க.]

**பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஆட்லி:**—லார்ட் மௌண்ட் பாட்டனுக்குப் பிறகு மிகவும் உயர்ந்த பதவியாகிய கவர்னர் ஜெனரல் பதவிக்குத் தாங்கள் நியமிக்கப் பட்டதற்காக என்னுடைய மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**லார்ட் பெதிக் லாரென்ஸ்:**—ராஜாஜி கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்ட செய்தியைக் கேட்டுக் குதூகலம் அடைகிறேன். ராஜாஜி என்னுடைய அத்தியந்த நண்பர் மாத்திரம் அல்ல; அவர் இந்தியாவில் உள்ள மிகப் பெரிய ராஜதந்திரிகளுள் ஒருவர். லார்ட் மௌண்ட்பாட்டன் வகித்து வந்த பதவிக்கு அவர் மிகவும் தகுதியானவர். இப்படிச் சொல்வதே அவருக்குப் பெரும் புகழ்ச்சியாகும்.

**ஜனாப் ஜின்னா:**—தாங்கள் இந்திய டொமினியன் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப் பட்டதற்கு என்னுடைய மனமார்ந்த வாழ்த்துக்கள். தங்களுடைய தலைமையின் கீழ் இரு டொமினியன்களுக்கிடையே உண்மையான நட்பு ஏற்படுமென்று நம்புகிறேன். இந்த நட்பு பாகிஸ்தானுக்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவு இந்தியாவுக்கும் அவசியம்.

**ஸர் ஸப்ரு:**—இந்த மகத்தான பதவியை வகிப்பதற்கு ராஜாஜி தான் மிகவும் பொருத்தமானவர்.

**டாக்டர் சச்சிதானந்த சின்ஹா:** தாங்கள் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப் பட்டதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். என்னுடைய மனப்பூர்வமான வாழ்த்துக்களை ஏற்றுக் கொள்ளவும். பாரத தேசத்துக்கு அதிர்ஷ்டம் பிறந்திருக்கிறது.



**பர்மிய வெளிநாட்டு மந்திரி யூ டின் டட்:** பர்மாவில் உள்ளவர்கள் ஒவ்வொருவருக்கும் இச்செய்தி மகிழ்ச்சி அளித்திருக்கிறது. இவ்வளவு உன்னதமான பதவிக்குத் தகுதி படைத்த ஒரு புதல்வனைப் பெற்றிருக்கும் இந்தியத் தாயின் பாக்கியமே பாக்கியம்.

**பிரதம மந்திரி ஓமந்தூர் ராமஸ்வாமி ரெட்டியார்:**—சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் பதவிக்கு ஒரு தமிழர் தேர்ந்தெடுக்கப்பட்டது தமிழ்நாட்டுக்கு விசேஷ கௌரவமாகும். கஷ்டமான சமயத்தில் ரொம்பப் பளுவான சுமையைத் தாங்குவதற்கு ராஜாஜி அழைக்கப்பட்டுள்ளார். ஆனால் அந்தச் சுமையைத் தாங்குவதற்கு வேண்டிய சக்தி அவருக்கு உண்டு.

**ஸர் மகமது உஸ்மான்:**—ராஜாஜி கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருப்பதை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். அவருடைய ராஜதந்திரமும் விவேகமும் பிரசித்தமானவை. ராஜாஜியின் நியமனத்தைக் குறித்துச் சென்னை மாகாணம் உண்மையாகவே பெருமைப்படுகிறது.

**பிரபல பம்பாய்ப் பிரமுகர் ஸர் புருஷோத்தம தாஸ் தாகூர்தாஸ்:**—ராஜாஜி வங்காளத்தில் மிக்க திறமையாகவும் வெற்றிகரமாகவும் நிர்வாகத்தை நடத்தினார். கவர்னர் பதவி ஏற்ற சொற்ப காலத்திற்குள், அவர் வங்காளத்தின் ஒவ்வொரு பகுதியினுடைய அன்புக்கும் உரியவரானார். லார்ட் மௌண்ட் பாட்டனுக்கு வெற்றி கிடைக்காத விஷயங்களில் கூட ராஜாஜி வெற்றி படைத்தார் என்று

ளை எதிர்பார்க்கிறேன்.

"நியூயார்க் ஹெரால்ட் ட்ரிப்யூன்" பத்திரிகை மார்ஷல் மௌண்ட் பாட்டனையும் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரையும் ஒப்பிட்டு எழுதியதாவது :—

இருவரும் சாணக்கியமும் நேர்மையும் திறமையும் உடையவர்கள். மிகவும் கஷ்டமான சமயத்தில் எதிராளியின் கருத்தையும் அபிப்பிராயத்தையும் மதித்துக் கொள்ளக்கூடிய அபூர்வமான சக்தி அவர்களுக்கு உண்டு. உலகில் இத்தகைய ராஜதந்திரிகள் ரொம்ப ரொம்பக் குறைவு.

"டெய்லி எக்ஸ்பிரஸ்" (லண்டன்): மிகவும் நிதானம் உள்ளவரும், ஆய்ந்தோய்ந்து பார்க்கக் கூடியவரும், காரியசித்தி யடையும் வரை விடாமுயற்சி செய்யக் கூடியவருமான ராஜாஜியை இந்தியா கவர்னர் ஜெனரலாக அடையப் போகிறது.



ஆக்டிங் கவர்னர் ஜெனரல் ராஜாஜியும் அரசியல் நிர்ணய சபைத் தலைவரும் சபைக்கு விஜயம் செய்கிறார்கள். பார்க!

# சத்திய வாக்கு

"ராஜாஜி என்னுடைய மிகப் பழைய நண்பர்களில் ஒருவர். என்னுடைய தத்துவங்களையும் கொள்கைகளையும் செயலிலும் வாக்கிலும் கடைப்பிடித் தொழுகுபவர்களில் அவர் முதன்மையானவர்.

1942-ம் வருஷம் அவர் என்னுடன் அபிப்பிராய பேதப்பட்டார் என்பது எனக்குத் தெரியும். அந்த அபிப்பிராய பேதத்தை அவர் பொது ஜனங்களிடையே தைரியமாகப் பறை சாற்றினார். அவருடைய தைரியத்தைப் பாராட்டுகிறேன்.

அவர் பெரிய சீர்திருத்தக்காரர். தமக்கு எது நியாயமென்று தோன்றுகிறதோ அதன்படி நடக்கக் கொஞ்சங்கூடத் தயங்கமாட்டார். அவருடைய அரசியல் ஞானமும் அறிவுத் திறமையும் மிக உயர்ந்தவை."— மகாத்மா காந்தி.

* * * *

காந்திஜி இரண்டு வருஷங்களுக்கு முன் சென்னைக்கு வந்துவிட்டு வார்தாவுக்குத் திரும்பிப் போகும்போது, பெஜவாடா ஸ்டேஷனில் அவரிடம் ஒரு கடிதம் கொடுக்கப்பட்டது. அந்தக் கடிதத்தில், "நீங்கள் ராஜாஜியைப் பிரதம மந்திரியாக்குவதற்காகவே சென்னைக்கு வந்ததாகச் சிலர் இங்கு பிரசாரம் செய்கிறார்கள். இதன் உண்மை என்ன?" என்று கேட்டிருந்தது.

இதற்கு மகாத்மாஜி "ஹரிஜன்" பத்திரிகையில் எழுதிய பதில் :—

"தென் மாகாணத்தில் பிரதம மந்திரி பதவிக்கு எல்லோரையும் விட அதிகத் தகுதி வாய்ந்தவர் ராஜாஜிதான். என் வசத்தில் அந்த உத்தியோகம் இருந்தால், அதை எனக்கு நானே கொடுத்துக்கொள்ளாவிடில், ராஜாஜிக்குத்தான் கொடுப்பேன்."

* * * *

காலஞ்சென்ற ஹரிஜனத் தலைவராகிய ஸ்ரீ எம். ஸி. ராஜா ஒரு முறை ராஜாஜி மீது புகார் செய்து காந்திஜிக்குக் கடிதம் எழுதினார்.

அதற்குக் காந்திஜி எழுதிய பதில்: "ராஜாஜியின் மீது சாட்டப்படும் குற்றத்தைப் பற்றி நானு விசாரணை செய்ய வேண்டும்? ராஜாஜியிடமே அந்த வழக்கைத் தாக்கல் செய்தால் அவர் குற்றச்சாட்டுச் செய்திருப்பது தம் மீது என்பதையும் கருதாமல் நியாயமாக விசாரணை செய்து நேர்மையாகத் தீர்ப்புக் கொடுக்கக் கூடியவராயிற்றே! ஆகையால் அவரிடமே இதைச் சொல்லுங்கள்."

# ஜரிகை வேஷ்டி

சகுந்தலா ராஜன்

முனியம்மாள், எதிரில் கிடந்த அழுக்குத் துணிகளை எடுத்துத் தனித்தனியாகப் பிரித்து இன்னின்ன உருப்படி என்று சொல்லிக் கொண்டிருந்தாள். மீனு நோட்டுப் புத்தகத்தில் அவற்றின் பெயர்களைக் குறித்துக் கொண்டிருந்தாள்.

"அம்மா! முன் சலவையில் வராத என்னுடைய புது ஷர்ட்டு இப்போதாவது வந்ததா?" என்று கேட்டுக்கொண்டே ஓடிவந்தான் பத்து வயது மணி.

"ஊஹூம்...காணோம்!" என்றாள் மீனு.

"ஏன் முனியம்மா! உன் மகன் பக்கிரிக்குப் போட்டு விட்டாயா, என் ஷர்ட்டை?" என்று முனியம்மாளைப் பார்த்துக் கேட்டான் மணி.

"இல்லைங்க, அவனுக்கு உங்க ஷர்ட்டு சரியாகக்கூட இருக்காதே? துறையிலே தோய்க்கும்போது தவறிப் போய் ஆத்தோடு போய் விட்டதோ என்னமோ!" என்றாள் முனியம்மாள்.

"ஆமாம், புதுத் துணியாகப் பார்த்துத் தான் ஆத்திலே போகும். அடுத்த சலவைக்காவது துணி வந்தால்தான் ஆச்சு. இல்லாவிட்டால் துணி விற்கும் விலையிலே அதற்கு ஐந்து ரூபாயாவது பிடிச்சுவிடுவேன், என்ன?" என்றாள் மீனு.

"அவ்வளவு ரூபா பிடிச்சுக்கிட்டா ஏழை என்ன அம்மா செய்வேன்? எத்தனையோ ஒருத்தர் வீட்டிலே பத்து ரூபாய் பிடிச்சிக்கிட்டாங்க, சரிகை வேட்டியைக் காணோமின்னு! தவறிப் போய் யார் வீட்டிலே கொடுத்தேனோ? உங்களைப்போல மகராசிங்களும் இருப்பீங்க; கொடுத்துடுவாங்க; எந்தப் பன்னாடை கையிலே ஆப்பிட்டுதோ?"

முனியம்மாள் சொன்ன இந்த வார்த்தைகள் ஏனோ மீனுவின் உள்ளத்தைத் தைத்தன. அவள் போன பிறகுங்கூட அப்படியே சிந்தனையில் லயித்து உட்கார்ந்து விட்டாள் மீனு. சென்ற மாதம் நடந்த அந்த விஷயத்தைப் பற்றிச் சர்ச்சை செய்யத் தொடங்கியது அவள் மனம்.

• • •

ஒரு மாதத்துக்கு முன்னால் மீனுவின் அக்காள் பிள்ளை ரங்கன் வந்திருந்தான். மீனு அன்று பீரோவில் துணிகளை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தாள்.

"ஏன் சித்தி! இவ்வளவு பட்டையாகச் சரிகை போட்ட வேஷ்டியைச் சித்தப்பா கட்டுகிறாரா?" என்று கேட்டுக் கொண்டே அவன் ஒரு சரிகை வேஷ்டியை எடுத்துப் பார்த்தான். மீனுவும் அப்போதுதான் பார்த்தாள் அந்த வேஷ்டியை.

"ஏது! நானே கவனிக்கவில்லை, நீ கவனித்து விட்டாயே? யாராவது அன்பளிப்பாகக் கொடுத்தார்களோ என்னவோ! சித்தப்பா இவ்வளவு பெரிய சரிகைக் கரை போட்ட வேஷ்டி வாங்கி நான் பார்த்ததேயில்லை!" என்றான் அவனும்.

"சித்தி, சித்தப்பா வெளியில் இருந்தால் அவரையே கேட்பேன். இன்று எனக்கு அவசியம்

### முதல்தர ராஜதந்திரி

1946-ம் வருஷம் இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் பார்லிமெண்டு தூது கோஷ்டியினருள் ஒருவராகிய ஹாப்கின் மாரிஸ் கூறியது :—

"ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் இந்தியாவின் முதல்தர ராஜதந்திரி. இது வரை நாங்கள் சந்தித்தவர்களுக்குள்ளே மிகச் சிறந்த நிர்மாண யோசனையை அவர் கூறினர்."

ஒரு சரிகை வேஷ்டி வேணும். இதை வேணுமானால் விலைக்கு எடுத்துக் கொள்ளட்டுமா?"

"விலைக்கா!"

"ஆமாம், சித்தி! புதிதாக வாங்கப் போனால் முப்பது ரூபாய்க்குக் குறையாது. நான் பதினைந்து ரூபாய் தருகிறேன், என்ன?"

"அது சரி; உன் சித்தப்பா வந்து கோபித்துக் கொண்டால்......?"

"கோபித்துக் கொண்டால் எழுதேன், சித்தி! வேஷ்டியைப் பார்சல் பண்ணி அனுப்பி விடுகிறேன்."

அதற்குமேல் மீனுவினால் மறுக்க முடிய வில்லை. "ஆகட்டும்" என்று உத்தரவு கொடுத்து விட்டாள். சங்கன் ஊருக்குப் போய் நான்கு நாட்கள் கழித்து மீனுவின் கணவர் வந்தார்.

மீனு வேஷ்டியைப் பற்றி அவரிடம் சொன்னாள்.

"சரிகை வேஷ்டி! அதுவும் அகலக் கரையா? அம்மாதிரி வேஷ்டியை நான் கட்டுகிற வழக்கமே கிடையாதே! சொப் பனம் கண்டாயா, என்ன?" என்று சொல்லி விட்டார் அவர்.

"இது என்ன, குட்டிச் சாத்தான் வேலையா!" என்று அப்போது எண்ணிக் கொண்டாள் மீனு. இப்போது முனியம் மாள் சொல்லி விட்டுச் சென்றதைப் பார்க் கும்போது, "ஒரு வேளை அந்தச் சரிகை வேஷ்டி அவனுடையதா யிருக்குமோ!" என்று தோன்றிற்று. உடனே "உங்களைப் போல மகராசிங்கன்னு நினைச்சுத் தந்திட்டு வாங்க; எந்தப் பண்ணுடை கையிலே ஆப்புட்டுதோ!" என்று முனியம்மாள் சொன்ன வார்த்தைகள் அவள் காதில் ஒலித்தன. பத்து ரூபாய்! முனியம்மாளுக்கு எப்படிப்பட்ட கஷ்டம் அது!

வேஷ்டியைத் திருவித்துக் கொடுத்து விடலாமென்றால், முதலாவது சங்கன் வடக்கே வேலையாகிப் போய் விட்டான். இரண்டாவது "இத்தனை நாளாக உங்கள் வீட்டிலேயா இருந்தது?" என்று கேட் பாளே முனியம்மாள்! பிறகு எந்தத் துணி காணாமற் போனாலும் அவளுக்கு நம்மீது அல்லவா அவநம்பிக்கை உண்டாகும்?

இப்படி யெல்லாம் என்னவெல்லாமோ எண்ணமிட்டுக் கொண்டிருந்த மீனு, சிறிது நேரத்துக்குப் பிறகு, "ஆமாம், அப்படித் தான் செய்ய வேண்டும்" என்று ஒரு நிஜ சாகத் தீர்மானித்துக் கொண்டு எழுந்தாள்.

அதே சமயத்தில், "சாமி! உங்க வேஷ்ட்டு ஆப்புட்டுக்கிடுச்சுங்க!" என்று சந்தோஷ மாகச் சொல்லிக்கொண்டே வந்தாள் முனியம்மாள்.

"பார்த்தாயா? தேடினால் தானே?" என்று சொல்லிக் கொண்டே வந்து, அதை வாங்கிக் கொண்டு போனான் மணி.



"கவர்னர் ஜெனரல் ராஜாஜி படித்துப் பட்டம் பெற்றது என்னிடத்திலேதான்" என்று பெங்களூர் சென்ட்ரல் காலேஜ் பெருமைப் படுகிறது.

"ஐந்து ரூபாய் பிடிச்சிக்கிறேன்னு சொன்னீங்களே, அப்போ எனக்கு அப்படியே பிடிச் சுக்கங்க, அம்மா!" என்றாள் முனி யம்மாள்.

இந்தச் சமயத்தில் முனியம்மாள் கொஞ் சமும் எதிர்பாராத விதமாக, "இந்தா! உனக்கு ஒரு பத்து ரூபாய்!" என்று ஒரு நோட்டை நீட்டினாள் மீனு.

"எதுக்கு அம்மா! இல்லைத மாத்து றுங்களா?" என் றாள் முனியம்மாள்.

"இல்லையடி! ரொம்ப 'நாளாய் உனக்கு இனாம் கொடுக்கணும்னு ஆசை. எடுத்துக்கோ!" என்று பெரிய பாரம் நீங்கியதுபோல் பணத்தை அவளிடம் கொடுத்தான் மீனு.

'பணத்திலே ரொம்பக் குறியாச்சே! இவங்களே கொடுக்கிறதன்னு ஆலமரத்துச் சோசியன் சொன்னது பலிச்சதன்னுதான் அர்த்தம்' என்று நினைத்து ஆனந்தம் பொங்கப் பல் வரிசையைக் காட்டிவிட்டு, "அம்மா, இன்னிக்கு நான் முழிச்ச முகம் நல்ல முகம். நீங்க மனசு இரங்கி இப்போ ஒரு பத்து ரூபா கொடுத்தீங்களா? அன்னிக்குச் சரிகை வேஷ்டி காணோமின்னு அபராதம் போட்டாங்களே, அவங்க வேறே காலையிலே எனக்கு ஒரு பத்து ரூபா கொடுத்தாங்க!" என்றாள்.

"என்னடி உளறுகிறாய்?" என்று கத்தினாள் மீனு.

"அதுதானுங்க, சரிகை வேஷ்டி காணோமின்னு அன்னிக்கு என்னைக் கன்னாபின்னான்னு திட்டினீங்க; நான் அங்கேயே அழுதுப்பிட்டேன். நேத்துச் சலவை எடுக்கப் போனேனா? அந்த வேஷ்டி சலவைக்குப் போகாமலேயே அழுக்குப் பெட்டியிலே கிடந்திச்சாம். அவங்க புருஷன் அதைப் பார்த்துட்டு, 'இப்படி அநியாயமா வாடிக்கையா துணி எடுக்கிறவளைத் திட்டினோமே' என்று மனம் நொந்து, ஒரு பத்து ரூபா எனக்கு இனாமாகக் கொடுக்கச் சொன்னாங்களாம்!" என்றாள் முனியம்மாள்.

இதைக் கேட்டதும் மீனுவின் தலை சுழன்றது. "முனியம்மாளுக்குச் சுக்கிர தசை; தனக்கு என்ன தசை? இப்படிச் சுளையாகப் பத்து ரூபாய் போக? சனியன் பிடித்த வேஷ்டி எங்கே யிருந்து வந்து குதித்தது நமது பீரோவில்?" என்று என்னவெல்லாமோ நினைத்துப் பார்த்தும் ஒன்றும் புரியவில்லை மீனுவுக்கு. மறுபடியும் ரங்கன் வெளியிலிருந்து வந்தபோதுதான் அந்த விவரம் புரிந்தது அவளுக்கு.

அன்று அவனாகவே ஆரம்பித்தான்:

"சித்தி, முன்னே உன்னிடம் ஒரு வேஷ்டி வாங்கிக் கொண்டு போனேனே, ஞாபகம் இருக்கா?"

"எப்படி மறக்க முடியும்? பெரிய விஷயமில்லையோ, அது!"



திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ராஜாஜி பல வருஷம் வசித்த குடிசை.

"பெரிய விஷயம்தான்! போன தடவை சித்தப்பா ஒரு நாள் எங்கள் வீட்டில் வந்து தங்கினாரே, துணிமணி அடங்கிய பெட்டியைக் கூடத் தொலைத்துவிட்டு! அப்போது கட்டிக்கொள்ள என் வேஷ்டியைக் கொடுத்தேன். பிறகு அதைத் திருப்பிக் கொடுக்க அவரும் மறந்து விட்டார்; நானும் மறந்து விட்டேன். இங்கே வந்து வேஷ்டியைக் கண்ணால் கண்டபிறகுதான் ஞாபகம் வந்தது. ஆனாலும் எப்படிக் கேட்பது? அதற்காக......" என்று மேலே சொல்லத் தயங்கினான் அவன்.

"அந்த மட்டும் நீ கெட்டிக்காரன்தான்!" என்றாள் மீனு.

என்ன இருந்தாலும், "உன்னாலே எவ்வளவு செலவு!" என்று எண்ணாமல் இருக்க முடியவில்லை அவளால்.

"என் வேஷ்டியை நானே பணம் கொடுத்து வாங்கிக் கொண்டு போனேனே. அதை நினைத்தால்தான் இப்போதுகூட எனக்குச் சிரிப்பு வருகிறது!" என்றான் ரங்கன்.

முனியம்மாளோ, "மகராசின்னா அவங்கதான் மகராசி! சுளையாட்டமாப் பத்து ரூபாயைத் தூக்கி எனக்கு இனாமாக் கொடுத்தாங்களே!" என்று எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருக்கிறாள்!



# புது டில்லியில் சங்கீத பூபதி

சுப்புடு

டில்லியில் இவ்வாரம் இரண்டு அரிய சம்பவங்கள் நடைபெற்றன.

மஹாராஜபுரம் விசுவநாதய்யரவர்களின் இன்னிசைக் கச்சேரியைப் பற்றியும் அவர் கலாமந்திரத்தின் நாட்டிய அரங்கேற்றத்திற்கு விஜயம் செய்ததைப் பற்றியும்தான் குறிப்பிடுகிறேன்.

எனக்கு வெகு நாளாக ஒரு சந்தேகம் இருந்தது. மஹாராஜபுரத்திற்குச் "சங்கீத பூபதி" என்று ஏன் பட்டம் கொடுத்தார்கள் என்பதுதான் அச் சந்தேகம். நேற்றையக் கச்சேரியில் வட இந்திய சங்கீதத்தில் "பூப்" என்றழைக்கப்படும் நமது "மோகன" ராகத்தை அவர் பாடிக் கேட்ட பின்தான் தெரிந்தது. அந்த ராகத்திற்கு அவரே "பதி" என்ற கோரணையில் பாடினார். "பிரமாதம்" என்ற வார்த்தையை நூறு மடங்கு பலம் கொடுத்துப் பிரயோகித்தால்தான் அவர் மோகனத்தைக் கையாண்ட முறையை வர்ணிக்க இயலும். அறுபது பிராயம் நெருங்கும் காலத்திலே அந்தகாரத்தா சத்தை எட்டிப் பிடித்துக் கொண்டு மேல் பஞ்சமத்தைத் தொட்டு விட்டுத் தொட்டு விட்டு வருகிறார்! சபையோர் புளகாங்கிதமடைந்து பன்முறை பலத்த கரகோஷங்கள் செய்து மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர்.

திங்கள்; அமாவாஸ்யை; சுபதினம். கலாமந்திரத்தின் நாட்டிய வகுப்பைப் பார்வையிடவும் குழந்தை கமலாவின் அலாரிப்புப் பூஜையின் அரங்கேற்றத்தை நடத்தி வைக்கவும் பூபதி வந்தார்.

ஸ்ரீமதி விசாலாக்ஷி தனது பிரத்யேகமான வெண்கலக் குரலில் "கண்ணன் வரக் காணேனே" "தாயே யசோதா" "ஆயர் குலத்துதித்த" முதலிய பாட்டுக்கள் பாடக் குமாரி கமலா சபையோர் பிரமிக்கும் வண்ணம் நடனமாடினாள். பூபதி "சபாஷ்! டேஷ்!" என்று சொல்லிப் பரவசமடைந்தார்.

பூபதிக்கு இருந்த குஷியிலே 'நடன போஸ்'லேயே ஒரு போட்டோ எடுத்துக் கொண்டிருக்கிறார், பாருங்கள்!

# சர்க்கார் பஸ்கள்

ஸ்ரீபாதசங்கர்

சென்னை நகரம் சம்பந்தப்பட்ட வரையில் சர்க்கார் பஸ் போக்குவரத்தைப் பூரண தேசியத் தொழிலாக்கியதைப் பற்றிக் "கல்கி"யின் 6—6—48 தேதி இதழில் பாராட்டி எழுதியிருக்கிறது. ரொம்ப சரி.

ஆனால் பஸ்கள் நீண்ட காலம் சரியாக, லாபம் தரக்கூடிய முறையில் நடப்பதைப் பற்றி உடனே கவனிக்க வேண்டும்.

இப்பொழுது ஓடும் எல்லா பஸ்களும் புதிதாக வாங்கப்பட்டவை. ஏராளமான பணம் (பஸ் ஒன்றுக்கு நாற்பதினாயிரம் ரூபாய்) கொடுத்து வாங்கியிருக்கிறார்கள். இந்தப் புதிய, விலையுயர்ந்த வண்டிகள் குறைந்தது ஏழெட்டு ஓடாமல் ஷெட்டுகளில் நின்று கொண்டிருப்பதைத் தினம் காணலாம். இது தவிர ஒன்றிரண்டு பஸ்கள் ரஸ்தாவில் ஓடிக்கொண்டிருக்கும் போதே ஸ்டாலக் செய்து விடுகின்றன. நடுரோட்டில் நின்று விடுவதால் பொதுஜனங்கள் படும் அவஸ்தை சொல்லி முடியாது. இன்று காலையில்கூட ஏழாம் நம்பர் பஸ் பெரியமெட் போலீஸ்டாபீஸுக்கு முன்னால் அனாதையாக நின்று கொண்டிருந்தது.

இப்படி இன்ஜின் கெட்டுப் போய் ஷெட்டில் கிடக்கும் பஸ்களைத் தவிர, ஓடிக் கொண்டிருக்கும் அநேக பஸ்களில் ஜன்னல்களும், கண்ணாடிகளும், கம்பிகளும், உட்காரும் ஸீட்டுகளும் ஆட்டம் கண்டிருப்பதையும் உடைந்து கெட்டிருப்பதையும் பார்த்தால், இந்த பஸ்களைச் சீக்கிரத்தில் குப்பையில் தள்ள வேண்டியதுதான் என்று தோன்றுகிறது. வண்டிகளுக்கு உள்ளேயும் வெளியேயும் அழுக்கும் தூசியும் அப்படியே துடைக்காமல் இருக்கிறது. பிரயாணிகள் உட்கார்ந்து உட்கார்ந்து தங்கள் சட்டைகளால்தான் அழுக்கைப் போக்கிக் கொள்ளுகிறார்கள்!

பஸ் தொழிலாளிகளைக் கேட்டால் "வண்டிகளைத் துடைப்பதற்குத் துணியும், ஜலம் விட்டு அலம்புவதற்கு வாளியும் சப்ளை செய்யவில்லை" என்று சொல்லுகிறார்கள். பஸ் கண்டக்டர் ஸூபரின்டென்டிடம் கேட்டால், அவர் "சப்ளை இலாகாவைக் கேள்" என்கிறாராம். சப்ளை இலாகாவைக் கேட்டால் "நிதி இலாகாவைக் கேள்" என்று சொல்லுகிறார்களாம். இப்படி ஒருவர் மற்றொருவரைக் காட்டிக் கொண்டே போனால் முடிவுதான் என்ன?—பஸ்கள் அநியாயமாகக் கெட்டுக் குட்டிச்சுவராகி விடும்.

லட்சக்கணக்காகப் பணம் போட்டு பஸ்களை வாங்கின பிறகு ஒரு ரூபாய் துணிக்கும் வாளிக்குமா இந்தத் தகராறு? யானை வாங்கியவன் தோட்டிக்கு அழுத கணக்காக அல்லவா இருக்கிறது! இதே கதைதான் மெகானிகல் டிபார்ட்மென்டிலும். நிற்க.

ஒரு வண்டிக்கு ஒரு நாள் ஒன்றுக்கு சுமார் நூறு ரூபாய் வருமானம் வருகிறது. பத்து வண்டிகள் ஒரு நாள் ஓடவில்லையென்றால் ஆயிரம் ரூபாய் நஷ்டமென்பதை சர்க்கார் உணரவேண்டும்.

நல்ல மோட்டார் இன்ஜினியர்களையும் மெக்கானிக்குகளையும் வைத்துக் கொண்டு அவ்வப்போது பஸ்களைச் சரியாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். உதாரணமாக, காலையில் ஒரு பஸ் ஷெட்டை விட்டுப் புறப்படும்போது, அது சரியான முறையில் இருக்கிறதா என்று மெக்கானிக்குகள் பார்வையிட்டு வெளியே அனுப்பவேண்டும். பஸ் இரவில் ஷெட்டுக்கு வந்ததும் மறுபடியும் அதை மெக்கானிக்குகள் சரியாக இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். நாள் முழுதும் ஓடிய அதிர்ச்சியால் ஏதாவது கழன்றோ, விழுந்தோ போயிருக்கலாம். அதை உடனடியாகச் சரிப்படுத்தி வண்டியைத் துடைத்துச் சுத்தப்படுத்த வேண்டும். இப்படி தினம் தவறாமல் செய்தால் ஏன் ஒரு பஸ்ஸாவது ஓடாமல் நிற்கப் போகிறது?

சர்க்கார் இன்னும் எத்தனையோ பெரிய தொழில்களை தேசிய மயமாக்க விரும்புகிறது. அவையெல்லாம் வெற்றிகரமாக நடக்க வேண்டுமானால், புதிதாக சர்க்கார் மேற்கொண்டிருக்கும் இந்த பஸ் தொழில் எடுத்துக் காட்டாக நடைபெற வேண்டியது மிகவும் அவசியம் அல்லவா?



பொறுப்பும் திறமையும் நேர்மையும் தேசியத்தின் மிகவும் முக்கியமான அம்சங்களாகும்.





இமயமலையின் வெள்ளிப்
பனிச் சிகரங்களோடு
போட்டியிட்டு நிற்கும்
வங்க கவர்னர் அரண்மனை.

●

சிவபெருமான் திருக்கோவில்

●

கண்ணில்லாக் குழந்தை
களின் குருகுலம்.



காந்திய கவர்னருக்கு மலைநாட்டினரின்
அமோக வரவேற்பு.



வரவேற்புக் கொண்டாட்டத்தில் ஓர் அம்சம்-
திபோத் கன்னியர் நடனம்.





மலைநாட்டு அநாதைக் குழந்தைகளின் மத்தியில்
தமிழ்நாட்டின் தீனபந்து.

★

கவர்னர் தாத்தாவும் பேரப்பிள்ளைகளும்
(வலது கோடியில்: ஸ்ரீ தேவதாஸ் காந்தி)

# ஊருக்கு நல்லது ★ ★ ★

ராஜாஜி

[வயது வந்த கிராம வாசிகள் தமிழ் எழுத்துக்களைக் கற்றுக்கொண்டவுடன் படிப்பதற்கென்று ராஜாஜி ஒரு புத்தகம் எழுதினார். 'ராக் ஹவுஸ்' கம்பெனியார் பிரசுரித்த அந்தக் கோட்டை எழுத்துப் புத்தகத்திலிருந்து சில பகுதிகளைக் கீழே வெளியிடுகிறோம். புதிதாகப் படிக்கக் கற்றுக் கொண்ட கிராமவாசி சொல்லுவது போலப் புத்தகம் ஆரம்பமாகிறது.]

எனக்குப் படிக்கத் தெரியும். படிக்கத் தெரியாதவனை அழைத்து, படிக்கக் கற்றுக் கொடுப்பேன்.

முதலில் சிறிய புத்தகம் படி, பிறகு நீயாகவே எதையும் படிப்பாய் — என்று சொல்லுவேன்.

திண்ணைகளெல்லாம் சின்னச் சின்னப் பள்ளிக்கூடங்களாக வேண்டும்.

படிக்கத் தெரிந்த எவனும் சும்மா இருக்கக் கூடாது. மற்றவர்களுக்குச் சொல்லித் தரவேண்டும்.

* * *

உழைப்பு, தேகத்திற்குப் பலம் கொடுக்கும். உழைப்பைப் போலவே விளையாட்டும் வேடிக்கையுங்கூட அவசியம். உழைப்பும் உற்சாகமும் நிறைந்த ஊர் எல்லா விதத்திலும் செழிக்கும்.

ஒழிந்த வேளைகளில் ஏதாவது ஒருவேலை செய்து கொண்டிருக்க வேண்டும். புழக்கடையில் இடம் இருந்தால், காய்கறித் தோட்டம் போடலாம்.

தேன்கூடு வைத்து வளர்க்கலாம், நூல் நூற்கலாம், கீற்று முடையலாம், கயிறு திரிக்கலாம். இன்னும் பல வேலைகள் உண்டு. காலத்தை வீணாக்கக்கூடாது.

* * *

நோய்களுக்குக் காரணம் அழுக்கு. உடம்பும் துணியும் அழுக்கு இல்லாமல் வைத்துக் கொள்ள வேண்டும்.

வீட்டையும் வாசலையும் புழக்கடையையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். ஊரின் சுத்தத்தையும் நாம் ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டும்.

குப்பையும் மலமும் கண்ட இடத்தில் போடக்கூடாது. போட்டால் காற்றைக் கெடுத்துவிடும். குறிப்பிட்ட இடத்தில் குழி தோண்டி அதிலேயே போடவேண்டும்.

இப்படிச் செய்தால் அது நல்ல உரமாகும். அதை வயலில் போட்டு உழுதால் நல்ல பயிர் உண்டாகும்.



சேலம் 'சேர்மன் ராஜகோபாலாச்சாரி சாலை' யில் உள்ள ராஜாஜி வசித்த பங்களா

குடி தண்ணீருக்கு உபயோகப்படும் கிணற்றில் யாரும் கால் வைக்கக்கூடாது. அதில் துணி தோய்க்கக் கூடாது. அழுக்குப் பட்ட பாத்திரத்தை விட்டு ஜலம் மொள்ளக் கூடாது.

ஆற்றுக்கும் குளத்துக்கும் பக்கத்தில் மலஜலம் கழிப்பது பெரும் பாவம்.

இப்படிச் செய்வதால் நரம்புச் சிலந்தி, காலரா, சீதபேதி முதலிய வியாதிகள் உண்டாகும்.

அழுக்கானது தண்ணீருக்குள் கலந்து கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போகும். ஆனாலும் அது வியாதியை உண்டாக்கும்.

ஊர்த் தெருக்களில் அல்லது நடக்கும் பாதைகளில் மலஜலம் கழிப்பது அநாகரிகம். மறைவான இடங்களில் இருந்து கழிக்க வேண்டும். துர் நாற்றம் உண்டாகாதபடி உடனே மண்ணைப் போட்டு மூடிவிட வேண்டும்.

ஒவ்வொருவரும் இந்த ஆசாரத்தை அனுசரித்து ஊரின் நாகரிகத்தையும் ஆரோக்கியத்தையும் காப்பாற்ற வேண்டும்.

குழந்தைகளுக்கும் இவ்வாறு செய்யும்படி சொல்லித் தரவேண்டும்.

நம்முடைய வீடும் நம்முடைய ஊரும் அழகாக இருக்க வேண்டும்.

வீட்டிலுள்ள அழுக்கைத் தெருவில் போடுவது நமக்கும் கஷ்டம், மற்றவர்களுக்கும் நஷ்டம்.

* * *

அரிசியை அதிகம் தீட்டுவதால் அதன் சத்துப் போய் விடுகிறது. மில் அரிசியில் சத்து இல்லை. குத்தின அரிசிதான் சாப்பாட்டுக்கு உபயோகப் படுத்த வேண்டும்.

உலக்கைக்குப் பதில் சில ஊர்களில் ஏற்றம்போல ஒரு யந்திரம் அமைத்து மிதித்துக் குத்துவது உண்டு.

அப்படிச் செய்வதனால் கை உலக்கையைக் கொண்டு உரலில் குத்துவதை விட அதிகமாகக் குத்தலாம்.

* * *

கேழ்வரகு, சோளம், கம்பு முதலிய தானியங்களை ஒரு வேளையாவது போஜனத்தில் சேர்த்துக் கொண்டால் தேகத்திற்குப் பலம் உண்டாகும்.

தேக ஆரோக்கியத்திற்குப் பாலோ, தயிரோ, அல்லது மோரோ சாப்பாட்டில் சேரவேண்டும்.

சாதாரணமாகக் காய் கிழங்குகளை வேக வைத்துக் குழம்பு கறியாக்கிச் சாப்பிடுகிறோம்.

சில காய் கிழங்குகளைப் பச்சையாகவே சாப்பிடலாம். அவைகளைப் பச்சையாகச் சாப்பிடுவதே தேகத்திற்கு நல்லது.

* * *

அழுக்கடைந்த நீரைக் குடிப்பதால் பல வியாதிகள் உண்டாகும்.

சாப்பிடும் பொருள்களின் பேரில் ஈக்கள் உட்காரவிடக் கூடாது. மூடி வைக்க வேண்டும்.

கண்ட இடங்களில் ஈ உட்காருவதால் அதன் கால்களிலும் அதற்கிருக்கும் சிறு தும்பிக்கையிலும் வியாதிப் புழுக்கள் படிந்த அழுக்கு இருக்கும்.

அது கண்ணுக்குத் தெரியாது. ஆனால் அது நாம் உண்ணும் பண்டங்களில் சேர்ந்தால் வியாதி பரவும்.

சாக்கடை ஜலம் முதலிய அசுத்தமான நீரைத் தேங்கி நிற்கவிடக் கூடாது. அதை உடனே தோட்டத்திற்கு உபயோகித்துவிட வேண்டும். அல்லது புது மண்ணோடு நன்றாய்க் கலந்து வெயில் பட்டு உலர்ந்து போகச் செய்யவேண்டும்.

தேங்கி நிற்கும் நீரில் கொசுக்கள் வளரும். அவை நம்மைக் கடித்து, பல வியாதிகளை ஒருவரிடமிருந்து இன்னொருவர் உடலில் புகுத்தும்.

ஆகையால் கொசுக்கள் விருத்தியாகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்கு முக்கியமாக, வீட்டுக்குப் பக்கத்தில் எங்கேயும் ஜலம் தேங்கி நிற்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

உடுக்கும் துணிகளைத் தினமும் தோய்த்து வெயிலில் உலர்த்திச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

ஒருவர் துணியை மற்றொருவர் உடுத்துவது பிசகு. உடுக்கும் துணிகளைப் போலவே படுக்கைத் துணிகளையும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

அவைகளைக் காற்றும் வெய்யிலும் படும்படியாக அடிக்கடி வெளியில் போட வேண்டும். கூடியவரை தோய்க்கவும் வேண்டும்.

வீடுகளுக்குச் சுண்ணாம்பு அடிப்பது மிகவும் நல்லது. வீட்டில் மூலை முடுக்குகளில் தூசி குப்பை தங்காமல் பார்த்து வருவது நன்மை தரும்.

வீட்டிலுள்ள சாமான்கள் கண்டபடி கிடக்க விடக்கூடாது. ஒழுங்காக வைக்க வேண்டும்.

• • •

நமது தேசம் இந்தியா. பாரததேசம் என்றும் ஹிந்துஸ்தானம் என்றும் சொல்வதுண்டு. இந்தியாவுக்கு வடக்கு எல்லை இமாலய மலைத் தொடர். அது இங்கிருந்து 1500 மைல் வடக்கே இருக்கிறது. உலகத்திலுள்ள மலைகளிலெல்லாம் அது உயரமானது. இமயமலையிலிருந்து கங்கை, சிந்து, யமுனை, பிரம்மபுத்திரி முதலிய பெரிய நதிகள் உண்டாகி ஓடுகின்றன. அந்த நதிகளின் கரைகளில் செழிப்புள்ள காடுகளும் பல பெரிய நகரங்களும் இருக்கின்றன.

இந்தியாவின் வடக்கு எல்லை இமயமலை, மற்றப் பக்கங்களில் கடல். கல்கத்தா, சென்னை, பம்பாய், கராச்சி இவை பெரிய துறைமுகங்கள். வியாபாரக் கப்பல்கள் இந்தத் துறைமுகங்களில் சரக்குகள் ஏற்றவும் இறக்கவும் செய்யும்.

நாமிருக்கும் தமிழ்நாடு இந்தியாவின் தெற்குக் கோடி. இந்தியாவின் தென் பாகத்தில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தப் பாஷைகள் பேசுகிறோம். வடக்கே அநேகமாக ஹிந்துஸ்தானியும் அதைச் சார்ந்த வேறு சில பாஷைகளும் பேசுகிறார்கள்.

தமிழ் ஜில்லாக்கள் செங்கற்பட்டு, வடஆற்காடு, தென்ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, சேலம், கோயம்புத்தூர், நீலகிரி.

தமிழ் நாட்டின் முக்கிய நதிகள் காவேரி, தென் பெண்ணை, பாலாறு, வைகை, தாம்பிரபரணி. காவேரி குடகு நாட்டில் உற்பத்தியாகி, காவிரிப் பட்டினத்தருகில் கடலில் சேருகிறது.

தமிழ் நாட்டில் பல கோயில்களும் அழகான ஊர்களும் இருக்கின்றன. காஞ்சீபுரம், திருவண்ணாமலை, சிதம்பரம், பழனி, மதுரை, ராமேசுவரம், ஸ்ரீரங்கம், தஞ்சாவூர், கும்பகோணம், திருவாரூர், ஸ்ரீ வில்லிபுத்தூர் இன்னும் பல.

தமிழ்நாடு பல்லாயிரம் வருஷங்களாக நாகரிகம் அடைந்த நாடு. முன்காலத்தில் மூன்று பாகமாகப் பிரிவுபட்டிருந்தது. வடபாகம் சோழநாடு. மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள் பாண்டிய நாடு. திருவனந்தபுரம், கோயம்புத்தூர், சேலம், மலையாளம் இவை சேரநாடு.

• • •

சேர சோழ பாண்டிய அரசர்களுக்குப் பின், நானூறு வருஷங்களுக்குமுன்



ஹோசூரில் பால ராஜாஜி படித்த போர்டு பாடசாலை

வரையில் தமிழ் நாட்டை விஜயநகரத்து அரசர்கள் தெய்வ பக்தியும் தேச பக்தியும் கொண்டு நியாயமாக அரசு புரிந்தார்கள். பிறகு பாளையக் காரர்கள் அல்லது சிற்றரசர்கள், மதுரை முதலிய இடங்களில் அரசாங்கம் நடத்தி வந்தார்கள். அதன் பிறகு, மகம்மதிய நவாபுகள் தமிழ் நாட்டை ஆண்டார்கள். அவர்களுக்குப் பின் ஆங்கிலேயருடைய ஆதிக்கம் வந்தது.

சென்ற நூற்றைம்பது வருஷங்களாக இந்தியா முழுதுமே ஆங்கிலேயர் ஆதிக்கத்திற்குள் இருந்து வருகிறது. இனி, நாமே நம்முடைய நாட்டைக் குடியரசு முறையில் சுதந்தரமாக நடத்திக்கொள்ள வேண்டும். கலகமில்லாமல் அமைதியாக நம்முடைய நாட்டை நாமே ஆள ஆரம்பிக்கவேண்டும்.

• • •

அரசாங்கம் இல்லாமல் ஜனங்கள் வாழ முடியாது. கலகம் கொள்ளை முதலியன நடவாமல் தேசத்தைச் சரியாகக் காக்கவேண்டும். ஜனங்களுக்குள் ஏற்படும் வழக்குகள் நியாயமாகத் தீர வேண்டும். பொது நன்மைக்காகச் செய்ய வேண்டிய பல காரியங்கள் உண்டு. அவை தனியாட்களால் செய்ய முடியாது. அதையெல்லாம் கவனிக்க அரசாங்கம் வேண்டும்.

அரசாங்கம் நல்ல முறையில் நடத்தப்படா விட்டால் ஜனங்கள் கஷ்டப் படுவார்கள். குடிகளின் சம்மதத்தின் பேரில் நடக்கும் அரசாங்கமே இந்தக் காலத்திற்குத் தகும்.

எல்லோரும் சேர்ந்தாற்போல் கும்பலாக அதிகாரம் செலுத்த முடியாது. அதற்காகப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டும். நல்ல பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தால் நல்ல வழியில் அரசாங்கம் நடக்கும்.

• • •

தேர்தல்களில் பணத்திற்கும் தாட்சணியத்திற்கும் ஆதரவுச் சீட்டுப் போடக் கூடாது. யோக்கியமாக நடப்பவர்களுக்கே ஆதரவு கொடுக்க வேண்டும். யாரையாவது கண்டு பயந்தோ அல்லது லஞ்சம் பெற்றுக் கொண்டோ, அல்லது கண்ணை மூடிக்கொண்டு யோசனையில்லாமலோ, பெட்டியில் ஆதரவுச் சீட்டுப் போடுவது ஊரைக்கெடுத்த பாவமாகும். தேர்தலுக்கு முன் கூட்டங்கள் கூடி, விஷயங்களை ஆலோசித்து, தைரியமாகவும் நியாயமாகவும் ஆதரவுச் சீட்டுகள் போடும் வழக்கம் ஏற்பட்டால்தான் நாம் சரியான அரசாட்சி அடைவோம்.

சீட்டைப் பெற்று அரசாங்க சபைகளுக்குப் போகிறவர்கள் தைரியமாகவும், விவேகமாகவும், யோக்கியமாகவும் காரியங்களை நடத்தவேண்டும். மக்களின் பொது நன்மையையே எப்போதும் கவனித்து வரவேண்டும். சிலருடைய ஆதரவைப் பெறுவதற்காகப் பலருக்கு நஷ்டம் உண்டாகும் காரியங்களை அவர்கள் செய்யக்கூடாது. துஷ்டர்களைக் கண்டு பயப்பட்டு நியாயத்திற்கு விரோதமாக எதுவும் செய்யக்கூடாது.

குடிகள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளைக் கொண்டு அரசாங்கம் நடைபெற்று வந்தால், அதற்குக் குடியரசு என்று பெயர். நன்மை தீமை, லாப நஷ்டம் எல்லாம் யோசித்து எப்படிப் பெரும்பாலோர் முடிவு செய்கிறார்களோ, அதை மற்றவர்கள் சமாதானமாக ஒப்புக் கொண்டால் தான் குடியரசு நடைபெறும். இல்லாவிட்டால் பலாத்காரம் தலையெடுத்து யாராவது சிலர் குழப்பம் செய்து ஏதேச்சாதிகாரம் நடத்துவார்கள். அப்போது அனைவரும் சுதந்தரம் இழந்து விடுவார்கள். வாழ்க்கை நரகம் போலாகும்.



ஹோசூரில் உள்ள ஏர்க்கரைத் தெருவில் ராஜாஜியின் பிள்ளைப் பிராயம் சென்றது



அமெரிக்கத் தூதர் மிஸ்டர் பிலிப்ஸ் 1943-ல் ராஜாஜியுடன் பேசிவிட்டுச் சென்றார். அதற்குப் பிறகு அமெரிக்க சர்க்காரின் கொள்கை இந்தியாவுக்குச் சாதகமாகத் திரும்பியது.

அரசாங்கத்தை நான்கு பாகங்களாகப் பிரித்துக் கொள்ளலாம். (1) சட்டங்களைச் செய்யவும், யார் மந்திரிகளாக இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கவும் சட்ட சபை வேண்டும். (2) அரசாங்கக் காரியங்களை இடைவிடாமல் கவனித்து நடத்திவர ஒரு மந்திரி சபை வேண்டும். (3) மந்திரி சபை தீர்மானித்த காரியங்களை நிறைவேற்ற உத்தியோகஸ்தர்கள் வேண்டும். (4) வழக்குகளைத் தீர்க்கும் கோர்ட்டுகள் வேண்டும்.

ஒவ்வொரு சட்டமும் விவாதம் செய்யப்பட்டுக் கடைசியில் பெரும்பாலோரின் இஷ்டப்படி சட்டசபையில் முடிவு செய்யப்படும். அபிப்பிராயங்களையெல்லாம் தடையில்லாமல் சொல்லி, வாதவிவாதம் செய்து தீர்மானித்த பின், தீர்மானித்த சட்டத்தை எல்லோரும் ஒப்புக்கொண்டு நடக்க வேண்டும். ஆட்சேபித்தவர்களும் நடக்க ஒப்புக்கொண்டு வேண்டும்.

இம்மாதிரி நடந்து கொண்டால்தான் குடிகளின் க்ஷேமத்திற்காக ஒழுங்காய் வேலை செய்ய முடியும். நாட்டில் அமைதியும் நல்ல அரசாட்சியும் நிலையாக நிற்கும்.

* * *

வழக்குகளைத் தீர்மானிப்பதற்காகக் கோர்ட்டுகள் வேண்டும். வழக்குகள் நியாயமாகத் தீர்க்கப்பட வேண்டும். சட்டங்களையும் மனிதர்களுடைய சுபாவங்களையும் நன்றாக அறிந்த யோக்கியர்கள் நீதிபதிகளாக அமரவேண்டும். அவர்கள் இரு பக்கத்தில் சொல்லப்படும் விஷயங்களையும் கவனித்துத் தீர்ப்புச் சொல்லுவார்கள். அதை இரு பக்கத்தாரும் ஒப்புக்கொண்டு சமாதானமாக வாழவேண்டும்.

நாமனைவரும் நியாயாதிபதிகளுக்கு உதவி செய்ய வேண்டும், பயமாவது தாட்சணியமாவது இல்லாமல் உண்மையைச் சொல்லுவதற்குச் சாட்சிகள் முன்வர வேண்டும். பொய்ச் சாட்சியம் சொல்வது கொலை பாதகத்தை விடப் பெரிய பாவம். 'எனக்கு என்னத்திற்கு இந்தத் தொல்லை' என்று உண்மையை மறைத்துவிடக் கூடாது. பணத்திற்காகப் பொய்ச் சாட்சியம் சொல்லக் கூடாது. வீண் வழக்குகள் தொடரக் கூடாது.

* * *

வரிப்பணம் வசூல் செய்யாமல் அரசாங்கம் நடத்த முடியாது. ஜனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய சட்டசபையில் விதிக்கப்பட்ட வரிகளை அனைவரும் சரியான காலங்களில் செலுத்தினால்தான் அரசாங்கம் சரியாக நடைபெறும். அவ

ரவர்கள் கொடுக்கவேண்டிய வரி என்ன என்று அறிந்துகொண்டு, கொடுத்து விட்டு, கொடுத்ததற்கு ரசீது பெற்றுக் கொள்ள வேண்டும்.

•　•　•

போலீஸ்காரர்கள் ஊருக்குக் காவல். பலசாலிகளும் மோசக்காரர்களும் மெலிந்தவர்களுக்குத் தொந்தரவும் கஷ்டமும் பயமும் உண்டாக்காமலிருக்கப் போலீஸ்காரர்கள் அவசியம். ஊரில் சண்டை சச்சரவு இல்லாமல் இருக்க வேண்டுமானால் போலீஸ்காரர்களுக்கு எல்லோரும் உதவி செய்யவேண்டும். குறைந்த சம்பளம் வாங்கினாலும் போலீஸ்காரர்கள் மிகவும் யோக்கியர்களாக இருக்கவேண்டும். யோக்கியர்களே போலீஸில் சேரவேண்டும். அவர்களுக்கு ஊரிலுள்ள எல்லோரும் உதவி செய்யவேண்டும்.

•　•　•

நீர்ப்பாசனம், கல்வி, விவசாயம் முதலிய இலாகா உத்தியோகஸ்தர்கள் குடிகளின் நன்மைக்காக அமைக்கப்பட்டிருக்கிறார்கள். குடிகளின் ஒத்துழைப்பால்தான் இந்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் வேலையைச் செய்யமுடியும். உத்தியோகஸ்தர்களிடம் குடிகள் தங்கள் குறைகளைச் சொல்லிக் கொள்ள வேண்டும். அவர்கள் சொல்லும் புத்திமதிகளைக் கேட்க வேண்டும்.

குடிகள் எல்லோருக்கும் சேர்ந்து பொதுவாகவும் பாரபட்சமில்லாமலும் வேலை செய்ய உத்தியோகஸ்தர்கள் அமைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களைக் கொண்டு ஒருவன் சொந்த லாபம் பெறுவதற்காக அவர்களுக்கு லஞ்சம் கொடுக்க முயற்சி செய்யக்கூடாது. உத்தியோகஸ்தர்களைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை. அவர்களை அவமதிக்கவும் கூடாது. அவர்களுக்கு வேண்டிய ஆதரவு கொடுத்துத் தைரியமாக அவர்களிடம் விஷயங்களை எடுத்துச் சொல்லவேண்டும்.

•　•　•

உண்மை பேசுவதும், பேசியபடி செய்வதும் வீரனுக்கு அடையாளம். எந்த மனிதனும் தனியாகச் சுகமடைய முடியாது. சமூகம் செழித்தால்தான் குடும்பமும் செழிக்கும். ஆதலால் பிறருடைய சுகத்தையும் கவனித்து வாழ வேண்டும்.

ஊர் நன்றாக இருந்தால் எல்லோருக்கும் நல்லது. ஒவ்வொருவரும் குடும்பத்திற்கு உழைப்பதுபோல் ஊருக்கும் உழைக்க வேண்டும். ஊருக்கு நல்லது, எனக்கும் நல்லதே என்று எல்லோரும் நடந்துகொள்ள வேண்டும்.



வீரம் மிக்க கூர்க்கர் வாழும் நேபாள நாட்டுப் பிரதமரும் வங்க கவர்னரும்

ஶ்ரீ

# யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

2, ராயல் எக்ஸ்சேஞ்ஜ் ப்ளேஸ், கல்கத்தா

•

செலுத்தப்பட்ட மூலதனம்

ரூ. 2 கோடிகள்

ரிஸர்வ் நிதி

ரூ. 40 லக்ஷங்கள்

•

G. D. பிர்லா

சேர்மன்

•

B. T. தாகூர்

ஜெனரல் மானேஜர்

•

இந்தியா, பர்மாவில் எல்லா முக்கிய நகரங்கள் டவுன்களில் பிராஞ்சுகளும் உலகம் முழுவதும் ஏஜென்ஸி ஏற்பாடுகளும் உள்ளன.

# கற்பகம் ★ ★

# ★ ★ காமதேனு

★

கல்கத்தா கவர்னர் மாளிகைத் தோட்டத்தில் மரம் நாட்டும் திருவிழா.

★

கோ பூஜை உற்சவம்

# கவர்னர் தாத்தா







கல்கத்தா கவர்னர் மாளிகையில் நடந்த குழந்தைகளின் கொண்டாட்டத்தில் கவர்னர் தாத்தா நடு நாயகமாய் விளங்கினர்.

●

பெண்களின்சேவாசிரமத்தில் தையல் வகுப்பைப்பார்வையிடுகிறர்.






# சீதையின் கனவு

[ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் ]

சீதை அசோக வனத்தில் பல இரவுகள் கண் விழித்து, ஒரு நாள், தானும் அறியாமல், பாவம், தூங்கி விட்டாள்.

• • • •

அசோக வனத்தில் தவித்துக் கொண்டிருந்த காலத்தில் சீதைக்கு அடிக்கடி லக்ஷ்மணனுடைய ஞாபகமே வரும். என்ன காரணமோ, எப்போதும் இராமனை நினைத்துக்கொண்டிருந்தாலுங்கூட, அடிக்கடி லக்ஷ்மணன் வந்து அவள் முன் நிற்பது போலவும், கண்களில் நீர் ததும்ப, ''மன்னி! இப்படி நீ என்னைச் சொல்லலாமா?'' என்று பார்வையினாலேயே சொல்லுவது போலவும் தோன்றும். இதை அவளால் சகிக்க முடியவில்லை. சிறைப்பட்டுக் கிடக்கும் துக்கத்தைவிட இது அவளை அதிகமாக வருத்திற்று. ''ஐயோ! தம்பியைச் சொல்லக் கூடாத சொல்லைச் சொல்லி, ஒரு குற்றமும் அறியாத அவன் மனதை நோகச் செய்தேனே! அரக்கன் என்னைத் தூக்கிவந்த பாவத்தைவிட, தம்பிக்கு நான் செய்த பாவமே பெரிது!'' என்று எண்ணி எண்ணிப் பரிதபிப்பாள்.

இவ்வாறு நினைந்து நினைந்து வருந்திவந்த படியால் அவள் அன்று கண்ணயர்ந்தபோது கனவில் திடீர் என்று லக்ஷ்மணன் அசோகவனத்தில் வந்து குதித்ததுபோல் கண்டாள்.

லக்ஷ்மணனைக் கண்டதும் சீதைக்கு ஒரே சந்தோஷ பரவசம், தாங்க முடியவில்லை.

''ஆ! வந்தாயா, தம்பி? நான் பட்ட கஷ்டமெல்லாம் கனவா?'' என்று ஆனந்த பாஷ்பம் சொரிந்தாள்.

''வந்துவிட்டேன், மன்னி! இனிப் பயமில்லை. துயரமில்லை. நான் உன்னை விட்டுப் போனது பெரும் பாவம், நீ என்னை மன்னிக்க வேண்டும்'' என்றான் லக்ஷ்மணன்.

பிறகு சிரித்துக் கொண்டு, ''ஆனாலும் மன்னி! நீ என்ன மூர்க்கத்தனம் செய்து விட்டாய், எவ்வளவு ஆபத்தாயிற்று!'' என்றான்.

லக்ஷ்மணன் அப்போது சிரித்த சிரிப்பு காலைப் பனிமேல் சூரிய கிரணம்

படும் காட்சியாக இருந்தது. துக்கமும் கண்ணீரும் சிரிப்பும் சந்தோஷமும் கலந்த அந்தச் சிரிப்பின் அழகை எப்படி எழுத முடியும்?

"நான் செய்தது தவறுதான், தம்பி! ஆனால் நீ என்னை அப்படித் தனியாக விட்டுவிட்டுப் போகலாமா? நான் என்னதான் திட்டினாலும், நீ அண்ணனுக்குச் செய்த பிரதிக்ஞை தவறலாமா? நான்தான் புத்தி கெட்டுப் போய் வாயால் சொல்லக்கூடாத பேச்சைச் சொன்னேன். அதற்காக நீ உன் அண்ணனுக்குக் கொடுத்த வாக்கை மீறலாமா?" என்றாள் சீதை.

* * *

"என்ன வாக்கு? எந்தப் பிரதிக்ஞை? இராமனுக்கு ஏதாவது நீ வாக்குத் தந்ததுண்டா? நான் கேள்விப்படவில்லையே?" என்றார் நாரதர்.

["நாரதர் இப்பொழுது எங்கே வந்தார்? அவரைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே?" என்று வாசகர்கள் கேட்கலாம். கனவில் நடக்கும் சம்பவங்களைப் பற்றி இவ்வாறெல்லாம் கேள்விகள் கேட்கக் கூடாது. நாரதர் எப்படியோ வந்து சேர்ந்தார். அது அவருடைய வழக்கம். இது புராணம் படித்தவர்களுக்கெல்லாம் தெரியும்.]

"வாக்குக் கொடுக்கவில்லையா? இதென்ன இப்படிப் பெரியவர் நீரும் பேசுகிறீர்?" என்றாள் சீதை. உலக மாதாவான சீதைக்கு நாரதரைக் கண்டால் என்ன பயம்?

சீதை கேட்டதற்கு நாரதர், "உன் பேச்சைக் கேட்டு, தம்பியை 'இங்கே இரு' என்று சொல்லிவிட்டு இராமன் ஒரே ஓட்டமாக மானைத் தொடர்ந்து போய்விட்டான். தம்பி என்ன சொல்கிறான் என்பதையும்கூட நின்று கேட்காமல் ஓடினானே! லக்ஷ்மணன் தன் வாயால் ஒரு பிரதிக்ஞையும் செய்யவில்லையே" என்றார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மணன் சிரித்தான். "இப்படியெல்லாம் வாதிப்பது எனக்குப் பிடிக்கவில்லை. இது ஒருவேளை ரிஷிகளுக்குச் சரியாயிருக்கலாம். நான் க்ஷத்திரியன், எனக்குப் பொருந்தாது. 'இரு' என்று அண்ணன் சொல்ல, நான் குடிசை வாயிலில் நின்றதே பிரதிக்ஞை" என்றான் லக்ஷ்மணன்.

"இவனை தம்பி யல்லவோ. அவர் போய்விட்டார்?" என்றாள் சீதை.

"நீங்கள் இருவரும் இவ்வளவு கடமையாக ஒப்புக்கொண்டால் எனக்கென்ன ஆட்சேபனை? உங்கள்பாடு" என்றார் நாரதர்.

* * *

"நான் திட்டிவிட்டால் உனக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்றாள் சீதை; "ஏன் ஊரை விட்டு அரண்மனையை விட்டுக் காட்டுக்கு வந்தோம். சத்தியத்திற்குப் பயந்து அல்லவா? பரதன் சொன்னதையும் மறுதளித்து, ஊரார் சொன்னதையும் நிராகரித்து வனவாசம் கொண்டது பிரதிக்ஞையைக் காப்பாற்றவல்லவா?" என்றாள்.

"பொறுக்க முடியாத சொல்லைச் சொல்லி என் இதயம் துடிக்கச் செய்தாயே?" என்றான் லக்ஷ்மணன், கொஞ்ச நேரம் பொறுத்தது.

"ஊரெல்லாம் திட்டினாலும் நீ இடத்தை விட்டு நகரலாமா?" என்றாள் சீதை.

"ஆம், மன்னி! நீ சொல்லுவது சரியே. அன்று உன்னை விட்டுப் போய்ப் பாதி வழி நடந்ததும் எனக்கும் அப்படித்தான் தோன்றிற்று. மன்னி திட்டினால் அது என்னை என்ன செய்யும்? அண்ணனுக்குக் கொடுத்த வாக்கல்லவோ பெரிது என்று திரும்பினேன். பத்து அடி குடிசையை நோக்கிச் சென்றேன்........."

* * *

பர்ணகுடியில் சன்னியாசி வேஷம் தரித்த இராவணன், சீதை அளித்த பழத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தவன், திடீர் என்று நடுக்கம் கொண்

---

சர்தார் படேல்: மாசில்லா ஒழுக்கமும் சிறந்த நிர்வாகத் திறமையும் தெளிந்த அரசியல் ஞானமும் படைத்தவர் ராஜாஜி.

மாஜி சென்னை கவர்னர் எர்ஸ்கின்: அறிவுக் களஞ்சியமான ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியார், சென்னை மாகாணப் பிரதம மந்திரியாய் இருப்பது பற்றிப் பெருமைப்படுகிறேன்.

டாக்டர் பட்டாபி சீதாராமய்யா: ராஜாஜி ஒப்பற்ற அறிவாளி. தீர்க்க தரிசனம் படைத்த அரசியல் நிபுணர். அவர் முன் யோசனையுடன் கூறியதைச் சரியென்று மற்றவர்கள் அறிந்துகொள்ளுவதற்கு ஐந்தாறு ஆண்டுகள் ஆகின்றன.

---

டான். அப்போது தான் லக்ஷ்மணன் திரும்பிப் பார்த்த சமயம். அவன் இடது கண்ணும் இடது கையும் துடித்தன. பழத்தை இலையில் வைத்து, வாசலை நோக்கிப் பார்த்தான். லக்ஷ்மணன் வந்து விடுவான், ஓட்டம் பிடிக்க வேண்டும் என்று பயந்தான்.

"பயப்படாதே!" என்றார் நாரதர். இந்தப் பொல்லாத ரிஷி மறுபடியும் அங்கே எப்படியோ வந்து கலந்து கொண்டார்.

[இதென்ன, கதை புதுத் தினுசாக இருக்கிறது. கோவை யில்லாமல் உளறலாக இருக்கிறது. அசோக வனமெங்கே, பர்ணகுடி எங்கே?... ஆட்சேபிக்க வேண்டாம். கனவு, அதிலும் மகா சோகத்தில் மூழ்கியிருந்த சீதையின் கனவு. அதற்குத் தலையும் முறையும் கிடையாது.]

"பத்து அடி நடந்தேன், குடிசைக்குத் திரும்பிப் போக. மறுபடி மன்னி, கோபத்தால் சிவந்த உன் கண்களும், சுருங்கிய நெற்றியும் என் கண் முன் வந்து நின்றன. 'ஆ! போகாமல் வந்து விட்டாயா, துஷ்டா!' என்று காளியின் அவதாரமாக நீ சீறிப் பாய்ந்தது போல் கண்டேன். மறுபடி திரும்பினேன். அண்ணனுக்குக் கொடுத்த பிரதிக்ஞை தூர ஓடிப்போய் விட்டது. நீ சொன்ன வார்த்தைகளும், என்னுடைய அகங்காரமும் புத்தியை மயங்கச் செய்தன. எவ்வாறாயினும் ஆகட்டும், மானமல்லவோ பெரிது என்று பல்லைக் கடித்துக் கொண்டு, மாயமானைத் தொடர்ந்து சென்றேன்."

"ஐயோ!" என்றாள் சீதை. "அப்போது நீ வந்திருந்தால் நான் பிழைத்திருப்பேனே!" என்றழுதாள்.

"நடந்தது நடந்து விட்டது, இப்போது இளைப்பு. போவோம்! இனிப் பழைய துக்கம் என்னத்திற்கு? நான் தான் வந்து விட்டேனே!" என்றான் லக்ஷ்மணன்.

"தம்பி! உனக்கு எவ்வளவு பெரிய அநியாயம் செய்தேன்! இதற்கு எவ்வாறு பிராயச் சித்தம்!" என்று பரிதபித்தாள் சீதை.

"இளைப்பு, இளைப்பு!" என்று லக்ஷ்மணன் சீதையைத் தட்டினான்.

கனவில் இவ்வாறு தட்டினதும் சீதை விழித்துக் கொண்டாள். லக்ஷ்மணனுமில்லை. நாரதருமில்லை. சுற்றிலும் அரக்கிகள்! அவர்களில் ஒருத்தி, "எழு! எழு! என்ன உறக்கம்? இராவணேசுவரன் வருகிறான். அதோ ஒலிக்கிறது சங்கு! அவன் சொல்லுகிறபடி செய். மூர்க்கத்தனம் பண்ணாதே! இராமனும் லக்ஷ்மணனும் கடலுக்கு அப்பால் அலைந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இவ்விடம் வர ஒருநாளும் முடியாது. நீ இராவணன் பத்தினிதான்! சந்தோஷமாய் ஒப்புக்கொள். வந்த சௌபாக்கியத்தை ஏன் வேண்டாம் என்று தள்ளி வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளுகிறாய்?" என்றாள்.

"ஆ!" என்று கதறினாள் சீதை. மரமும் செடியும் பெருமூச்சு விட்டன.

* * *

இதற்கு மறுநாள்தான் அனுமான் கடலை ஒரே தாண்டாகத் தாண்டி இலங்கை வந்து சேர்ந்தான். அனுமான் வருவதற்கு முன் சூசனையாக இந்தக் கனவைச் சீதை கண்டாள். இம்மாதிரிச் சில சமயம், வரும் சம்பவங்களைக் கனவில் முன்னால் காண்பது உண்டல்லவா? சீதைக்கு அப்போது அனுமானைத் தெரியாதாகையினாலே அனுமானுக்குப் பதில் தன் கனவிலே லக்ஷ்மணனைக் கண்டாள்.

பிறகு அசோக வனத்தில் நடந்த கதை எல்லாருக்கும் தெரியும். அனுமான் யார் என்பது தெரிந்ததும், சீதை முதலில் கேட்ட கேள்வி, "லக்ஷ்மணன் சௌக்கியமா?" என்று. அதன் பிறகு தான் புருஷனைப் பற்றி க்ஷேம சமாசாரம் கேட்கலானாள்.

தான் லக்ஷ்மணனுக்குச் செய்த அநியாயத்திற்காகச் சீதை வருந்தப்



பட்டது, அவளைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. யாரிடமும் சொல்ல முடியாத வருத்தமே கொடிய வருத்தம் அல்லவா?

சீதை பட்ட துக்கத்தையெல்லாம் நினைத்து, நாமும் ஓரளவு நம்முடைய துக்கங்களை மறக்கலாம். அனுமான், "சிரஞ்சீவி" என்கிறார்கள் பெரியோர்கள். அதாவது, இப்போதும் எங்கேயும் நமக்கு உதவக் காத்திருக்கிறான். துக்கம் ஏற்பட்டால், "ராம, ராம" என்று சொல்லிக் கொண்டு பொறுப்போம். அனுமான் வந்து நிவாரணம் செய்வான் என்பதில் சந்தேகமில்லை.

## சமயத்தில் வேண்டுவது பலசாலியான மனிதரே!




ஒரிஸ்ஸா, நைஜாம் சமஸ்தானங்கள், ஆந்திர ஜில்லாக்கள் தமிழ் நாடுகளுக்கு ஏஜண்டுகள் :

**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**

பெர்ஹாம்பூர், செகந்திராபாத், பெஜவாடா, மதுரை

---

## ரூ. எஸ். ஏ. பௌண்டன் பேனா இனாம்!
## அழகிய கைகெடியாரம் ரூ. 18-8-0



ஸ்விஸ் தயாரிப்பு - லீவர் இயக்கம்
7 வருஷங்களுக்கு உத்தரவாதம்

### கடியாரம் நெ. 1 வட்டமான தட்டை வடிவம்

| | |
|---|---|
| வட்டமானது அல்லது சதுரமானது | ரூ. 18-8-0 |
| டி உயர்ந்த ரகம் | ரூ. 20-8-0 |
| 4 அல்லது 5 ஜூவெல்ஸ் தட்டையானது | ரூ. 24-0-0 |
| டி உயர்ந்த ரகம் | ரூ. 27-0-0 |
| 5 அல்லது 7 ஜூவெல்ஸ் ரோல்டு கோல்டு கேஸ் | ரூ. 50-0 |
| டி உயர்ந்த ரகம் | ரூ. 55-0 |
| 15 ஜூவெல்ஸ் குரோமியம் | ரூ. 38-0 |
| ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 75-0 |

மேற்படி கடியாரங்களில் செண்டர்செகண்டும் ரேடியமும் தேவையானால் ரூ 4, அதிகப்படி.

### கடியாரம் நெ. 2 & 3. நீண்ட சதுரம் அல்லது டோனோ வடிவம்

| | |
|---|---|
| 4 அல்லது 5 ஜூவெல்ஸ் - குரோமியம் | ரூ. 35-0 |
| டி உயர்ந்த ரகம் | ரூ. 40-0 |
| 7 ஜூவெல்ஸ் குரோமியம் | ரூ. 45-0 |
| டி ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 58-0 |
| 15 ஜூவெல்ஸ் பளபளப்பான குரோமியம் | ரூ. 70-0 |
| டி ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 90-0 |

### கடியாரம் நெ. 4 வளைந்த வடிவம்

| | |
|---|---|
| 4 அல்லது 5 ஜூவெல்ஸ் குரோமியம் | ரூ. 38-0 |
| டி உயர்ந்த ரகம் | ரூ. 42-0 |
| 7 ஜூவெல்ஸ் குரோமியம் | ரூ. 46-0 |
| டி ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 60-0 |
| 15 ஜூவெல்ஸ் பளபளப்பான குரோமியம் | ரூ. 72-0 |
| டி ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 92-0 |

| | |
|---|---|
| அலாரம் டைம்பீஸ் | ரூ. 18/- |
| சற்று உயர்ந்த ரகம் | ரூ. 22/- |
| மிகவும் உயர்ந்த ரகம் | ரூ. 25/- |
| பௌண்டன் பேனாக்கள் | ரூ. 3/8. |
| நடுத்தரமானவை | ரூ. 4/8. |
| உயர்ந்த ரகம் | ரூ. 8/8. |

தபால் செலவு பிரத்யேகம். மேற்படி கடியாரம், பேனாக்களில் ஏதாவது மூன்றுக்கு ஆர்டர் செய்தால் ரூ. 8/8 பெறுமானமுள்ள ஒரு பௌண்டன் பேனா இனாமாகக் கொடுக்கப்படும்.

**STANDARD WATCH COMPANY**
**Post Box No. 11419 : CALCUTTA (K)**

## பாரமற்ற தலையும்
## பளபளப்பான வதனமும் !

உடலில் கனமான உணர்ச்சியும், கண்கள் ஒளியிழப்பதும், சரீரம் சுருங்குவதும் தடங்கலான மல பிரவிருத்தி ஏற்படுவதனுல்தான். அவற்றை போனேமின்ட் உடனே நிவர்த்தி செய்துவிடும். கிரமமாகக் குடலை சுத்தி செய்துகொள்வது உங்கள் சுக வாழ்வுக்கு இன்றியமையாதது என்பதை மறவாதீர்கள்.

**சுலபமாக மலமிளக்கும் உன்னத சஞ்சீவி**

ரூ. 1-2-0, ரூ. 0-7-0 ஆகிய இரு சைஸ்களிலும் எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜன்டுகள் :

**ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி,**
**99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்**




No. 6

சுலபமாக
எழுதுங்கள்



எவ்விதமாக எழுதினுலும் சுலபமாக எழுதுவது என்பது கீர்த்தி வாய்ந்த மெண்ட்மோர் ஆடோ-ப்ளோ பேனாவின் முக்கிய அம்சங்களில் ஒன்று. இந்திய சீதோஷ்ண நிலைக்கேற்பவே செய்யப்பட்ட அதன் பாகங்கள் இதை நன்கு நிரூபிக்கின்றன. இத்துடன் ட்ராப் பில்லிங், லீவர் பில்லிங், ஸ்டட் பில்லிங் ஆகிய மாடல்களில் ஆஸ்மி இரிடியம் தோய்க்கப்பட்ட முனைகளுடன் கூடிய 14 காரட் தங்க நிப்புடன் கூடியது. பெருமைபடக் கூடிய பேனாவிற்கு இதை விட வேறு என்ன வேண்டும்?

விலை
ரூ. 15/-

**MENTMORE**
*Auto-Flow*

மெண்ட்மோர்
ஆடோ-ப்ளோ
இங்கிலாந்தில் செய்யப்பட்டது

வர்த்தக விசாரணைகளுக்கு முழு உரிமை பெற்ற வினியோகஸ்தர்கள் :
**முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்., 15, கங்குராம செட்டித் தெரு, மதராஸ்**

---

**விற்பனைக்குப் பிறகும் எங்கள் சேவை !**

உங்கள் மெண்ட்மோர் 'ஆடோ-ப்ளோ' பேனாவில் எவ்வித கெடுதல் ஏற்பட்டாலும் உங்களுக்கு அருகிலுள்ள சர்வீஸ் டிப்போவில் ரிப்பேர் செய்து கொள்ளலாம். எல்லா டிப்போக்களிலும், ரிப்பேர் சாமான்கள் போதிய ஸ்டாக் உள்ளன. உங்களுக்கு அருகாமையிலுள்ள ஏஜண்டு : C. வெங்கட்ராமய்யா செட்டி & ஸன்ஸ் 57-பந்தர் தெரு, மதராஸ்

# "எவர்ஸில்வர்"

## பாத்திரங்கள்

**வெள்ளியின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்டவை**

(பம்பாய் தேவிதயாள் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டவை)

•

தென்னிந்தியாவிற்குப் பூரண விநியோகஸ்தர்கள் :

## ஸாம்ஸன் & கோ.

எஞ்சின், எலெக்ட்ரிக் மோட்டார், பம்பு செட் டீலர்கள்

8/22, பிராட்வே, மதராஸ்

தந்தி: "BARAPASH"] [போன்: 4821

•

வெளியூரில் கிடைக்குமிடம் :

தென்னாற்காடு ஜில்லாவிற்கு :

**C. T. சோமையா செட்டியார்**

**C/o Y. PR. KR. ST. பாங்க்**

பண்ருட்டி (தென்னாற்காடு ஜில்லா)

சேலம் ஜில்லாவிற்கு :

**எஸ். வி. ராமனுதன்**

**C/0 சூடாமணி ஸ்டோர்ஸ்**

திருச்செங்கோடு, நாமக்கல் (சேலம்)

தஞ்சை ஜில்லாவிற்கு :

**எம். வி. எம். ஸ்டோர்ஸ்**

கும்பேஸ்வரர் சன்னதித் தெரு கும்பகோணம்

திருச்சி ஜில்லாவிற்கு :

**இந்தியா டிரேடிங் கம்பெனி லிமிடெட்,**

மலை வாசல், திருச்சிராப்பள்ளி

பிராஞ்ச் ஆபீஸ் :

**கோபாலபுரம் எக்ஸ்டென்ஷன், ரயில்வே ஸ்டேஷன் ரோடு, கோயமுத்தூர்**



## தலையில்

தலை மயிர் தெரிகிறதா, அல்லது அடித் தலை தெரிகிறதா? அடித் தலை புலப்படும் பக்ஷத்தில், உதிர்ந்த கேச ராசிகளுக்குப் பதில் புதுக் கூந்தல் முளைக்க வில்லை என்பது நிச்சயம். அச் சமயம் கேசவர்த்தினியைக் கொண்டு பரிஹரிக்காமல், பாதி வழுக்கையைப் பூரண வழுக்கை யாக விடுவானேன்? வழுக்கை யால் ஏற்படும் இழந் தோற்றத் தையும் அனுபவிப்பானேன்?

உதிர்ந்த இலைகள் மறுபடி முளைத்து விடும், ஆனால் சில சமயங்களில் உதிர்ந்த கூந்தல் சிகிச்சை யில்லாமல் முளைப்ப தில்லை. அச்சமயங்களில் கேச வர்த்தினியை உபயோகித்து மயிர் உதிர்வதை நிறுத்தி, இளம் கூந்தலையும் இளமையையும் ஒருங்கே பெறுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணு 14**

(மேல் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர் :

**தென் இந்திய ரஸாயனசாலை**

**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்**

REGD. No. M. 4392

# நறுமணங்கமழ் புதுமை...



எந்த நேரத்திலும் காலை வேளைக் குளுமையும் தூய்மையுமடைய வேண்டுமானால் முதன் முதலில் ரம்மியமான கோட்டி சரக்குகளைத்தான் தேடவேண்டும்....

புதுமைக்காந்தியும் புத்துணர்ச்சியும் பெற "போர்ஸீசன்ஸ்" ஓடிக்கொலோன், சருமத்தைக்குளுமைப் படுத்தி கவர்ச்சி மிகு நறுமண மூட்ட கோட்டி டால்க்

## போர் "ஸீசன்ஸ்"

## ஓடிகொலோனும் டால்க்கும்

Coty

கோட்டி தயாரிப்பு.

பூர்ண விநியோகஸ்தர்கள் :
ஜியாப்ரி மானர்ஸ் அண்ட் கோ லிமிடெட்
பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - டில்லி - லாகூர்

CT. 7 TM